

# மந்திர் - மசூதி சிந்தனையில்...

அய்யர் பண்ணையில்
அமீர்ஜானின் டிராக்டர்
ஆழ உழும் போது
ஆபிரகாம் தொழில் நுட்பம்!

வஹாபின் கொடிக்காலில்
வகை வகையாய் வெற்றிலைகள்
வாசனைப் பாக்கு முதல்,
அகர் பத்தி சாம்பிராணி எல்லாமும்
அல்லாஹ்வின் அன்பர்கள்!

முஸ்லீம் கபர்ஸ்தானில்
முந்நூறு தென்னைகள்
முற்றிய விளைச்சலினால்
முருகனுக்கு இளநீர் அபிஷேகம்
அண்ணனுக்குச் சிதறல் தேங்காய்!

நல்ல காலமாய்க்
கரும்பிலும் கடலையிலும்
நெல்லிலும் தென்னையிலும்
பிறைக்குறி சூலாயுதம்
சிலுவைச் சின்னங்கள் பதிக்கும்
'தொழில்' நுட்பம் பயிலவில்லை!

நாற்பதாண்டுகளுக்கும் மேலாய்
இது இந்திய நாடுதான்!
இந்து நாடு அல்ல - என்பதை
எதிர்காலம் உணரட்டும்!
வரலாற்றைத் திருப்பாமல்
வாழ்க்கையைத் திருத்தினால்
இந்திய அரசியலில்
நாகரிகக் கொடி பறக்கும்!

- கலசைக் கிழார்



# மனம் ஒன்றுபட மதம் தடையில்லை!



*வெறுப்பு குழப்பத்தை விளைவிக்கிறது.*
*வெறுப்பில்லாத நல்ல உள்ளம் உடையோரே தெளிந்த சிந்தனையோடும், கவனத்துடனும் செயலாற்ற முடியும்.*
*- ரிக்வேதம்*

**டீ**.வி. நிகழ்ச்சி ஒன்றில், இசை அமைப்பாளர் நௌஷாத், ஒரு பாட்டை ஒலிபரப்பு முன் சொன்னார் :

''இந்தப் பாடலை இயற்றியவர் ஒரு முஸ்லிம் - ஷகீல் படாயுனி. இசையமைத்த நான் ஒரு முஸ்லிம். பாடலைப் பாடிய முகமது ரஃபி ஒரு முஸ்லிம்.''

பாடல் : 'மன் தர்பத் ஹரி தஞ்சன் கோ ஆஜ்.'

படம் : பைஜு பாவ்ரா.

''இதை விட மத ஒருமைப்பாட்டுக்கு வேறு சிறந்த உதாரணமே தேவையில்லை!'' என்றார் நௌஷாத்.

பார்க்கப் போனால் திரைப்படத் துறையிலும், டீ.வி. நிகழ்ச்சித் தயாரிப்புகளிலும் இந்து - முஸ்லிம் சமுதாயத்தினர் இணைந்து பணியாற்றுவது போல வேறு எந்தத் துறையிலும் பார்க்க முடியாது. நாடு முழுவதும் பரபரப்பூட்டிய டீ.வி. மகாபாரதத்தின் முழு வசனத்தை எழுதியவர் ரஹி மாஸும் ரஸா என்ற இஸ்லாமிய கதாசிரியர்தாம்!

திரைப்படத் துறையிலிருந்து சற்றே திரும்பி, திருவல்லிக்கேணிப் பக்கம் நுழைந்து விசாரித்தால், நெடுஞ்சாலையிலிருந்து பிரிந்து உள்ளே செல்லும் பல தெருக்களில் இவ்விரு சமுதாயத்தினரும் இணைந்து வாழ்வது கண்கூடாகத் தெரியும்.

'க்வீன்ஸ் ஜாரி வொர்க்ஸ்' உரிமையாளர் ஷஃப்யுதீன் சொன்னார் : ''எங்கள் தயாரிப்புக்களை முஸ்லிம் சமூகத்தினர் மட்டுமே வாங்குகிறார்கள் என்பதில்லை. மார்வாடி, மகாராஷ்டிரர், சிந்தி என்று இந்து மதத்தினர் பலரும் கூட வாங்குகிறார்கள். எனவே எங்கள் நண்பர்களில் பலர் இந்துக்கள். இவர்கள் வீட்டு நிகழ்ச்சிகள் எல்லாவற்றுக்கும் நாங்கள் போவதும், எங்கள் குடும்ப நிகழ்ச்சிகளில் அவர்கள் பங்கேற்பதும் சர்வ சாதாரணம்.''

திருவல்லிக்கேணி தெரு ஒன்றில் முழுக்க முழுக்க முஸ்லிம் குடும்பங்கள். முதல் வீடு மட்டும் இந்துக் குடும்பம். இங்கே வசிக்கும் ஆனந்தி சொன்னார் : பிள்ளையார் சதுர்த்தி ஊர்வல அசம்பாவிதங்கள் நிகழ்ந்த போது கூட இங்கே எந்தவித மாறுபாடும் இல்லாமல்தான் இயல்பாக இருந்தோம். ஒரு சங்கடமும் இருக்கவில்லை.''

சூளைமேடு கல்யாணபுரம் பகுதியில் வசிக்கும் வருவாய்த் துறை உயர் அதிகாரி உபயதுல்லாவுக்கு வேறு மாதிரி அனுபவம். ''எங்கள் குடியிருப்பில் எங்களுடையது மட்டுமே முஸ்லிம் குடும்பம். மற்ற பத்தொன்பதும் இந்து பிராமணக் குடும்பங்கள். நாங்கள் பிரியாணி செய்யும் போது, அவர்களில் சிலரிடம், ''உங்களுக்கு ஆட்சேபணை ஒன்றும் இல்லையே?'' என்று கேட்பாள் என் மனைவி. ''எங்களிடம் சாப்பிடும் வழக்கம் இல்லை மாமி. (என் மனைவியை அவர்கள் மாமி என்றுதான் அழைக்கிறார்கள்) வாசனையையாவது பிடிக்கிறோமே!'' என்பார்கள் தமாஷாக.

பரஸ்பரம் சகஜ பாவம் தென்படும்விதமாக, பல குடும்பங்கள் அடுத்தடுத்து வாழ்கின்றன. ''கல்யாணம் முதலிய விசேஷங்களில் பங்கு கொள்வது என்று மட்டும் இல்லை. உடம்பு

• அப்துஸ் சமது



சரியில்லாமல் மருத்துவ மனைக்குப் போக நேர்ந்தால், அல்லது வேறு அவசரம் என்றால் தேவையான உதவிகளை அளிக்க இரு சமுதாயத்தினருமே ரெடி.



✱ ஃபாத்திமா பாபு

**ப**ம்பாயில், தங்கம் ராமசாமிக்கு ஏற்பட்ட அனுபவம் அற்புதமானது. ''அங்கு ஓர் உறவினர் வீட்டில் தங்கியிருந்தோம். அந்தச் சமயம்தான் அயோத்தி கலாட்டா. அப்போது பார்த்து என் உறவினருக்கு பாரிச வாயு தாக்கி, ஒரு பக்கக் கை, கால்கள் செயல்படாமல் போய் விட்டன. அருகிலிருந்த ஒரு டாக்டர் வந்து பார்த்து விட்டு, 'உடனடியாக மருத்துவ மனைக்கு எடுத்துச் செல்லுங்கள்!' என்றார். வெளியிலோ ஏக கலாட்டா. இந்த நிலையில்தான் சந்தேகத்தோடு ஆம்புலன்ஸுக்குப் போன் செய்தோம். அதன் டிரைவர் ரொம்பவும் சாமர்த்தியமாகச் சந்து பொந்துகளில் புகுந்து ஆம்புலன்ஸைக் கொண்டு வந்தார். மீண்டும் அவ்வாறே ஓட்டிக் கொண்டு போய் மருத்துவமனையில் சேர்த்தார். அவருக்கு நன்றி தெரிவிக்கும் போது தான் அந்த டிரைவர் ஒரு முஸ்லிம் என்று எங்களுக்குத் தெரியவந்தது. எனது உறவினருக்கு வைத்தியம் பார்த்த டாக்டர் ஒரு கிறிஸ்துவப் பெண்மணி. இந்தியாவின் ஒருமைப்பாட்டை எப்போதும் யாராலும் குலைக்க முடியாது என்பதற்கு இதைவிட வேறு என்ன உதாரணம் வேண்டும்?'' என்கிறார் தங்கம் ராமசாமி.

**செ**ன்னையில், பம்பாயில் என்று மட்டுமா? நம் நாட்டின் மூலை முடுக்குகளிலெல்லாம் இந்துக்களும் முஸ்லிம்களும் அடுத்தடுத்துத்தான் வாழ்கிறார்கள். தஞ்சை ஜில்லாவில் ஒரு முஸ்லிம் கிராமம் பக்கத்திலேயே ஹிந்து கிராமம் என்று ஏராளமாய் உள்ளன. நாகூர் தர்க்காவில் ஆண்டுதோறும் கந்தூரி விழாவுக்கு முஸ்லிம்கள் மட்டுமின்றி ஆயிரக்கணக்கான ஹிந்துக்களும் வருகிறார்கள். பிரார்த்தனை செய்து கொண்டு இங்கு வந்து பெரியோரும் சிறியோரும் மொட்டை போட்டுக் கொள்வதும் உண்டு.

✱ நாகூர் தர்க்கா



சமீபத்திய வெள்ளச் சேதத்தின் போது திருநெல்வேலி, கன்யாகுமாரி மாவட்டங்களில் முஸ்லிம் பகுதிகளை முன்வதாக அடைந்து உதவிகள் அளித்தது ஆர். எஸ். எஸ்தான் என்றும், இதை அந்தப் பகுதியில் உள்ள முஸ்லிம் மக்களே பாராட்டியதாகவும் ஆர்.எஸ்.எஸ். நண்பர்களே பெருமையுடன் சொல்கிறார்கள்.

''நாட்டின் ஒருமைப்பாட்டைக் குலைக்கும் நோக்கத்துடன் சில இந்து மதவாத அமைப்புகள் செயல்படுவது வடக்கேயுள்ள பல இளைஞர்களை கவர்ந்திழுத்திருக்கிறதே!'' என்று இளைஞரான ரமேஷ் குமாரிடம் கேட்ட போது, அவர் சொன்னார்: ''தவறாக வழிகாட்டப்பட்டிருக்கும் இளைஞர்கள் அவர்கள். என்னை எடுத்துக் கொள்ளுங்கள். நான் ஏராளமானவர்களுக்கு ரத்தம் கொடுத்திருக்கிறேன். ஒருமுறை என் வீட்டிற்கு முஸ்லிம் பெரியவர் ஒருவர் வந்தார். அவர் கோடீஸ்வரர். 'தம்பி எனக்கு உயிர்ப் பிச்சைக் கொடுத்தீங்க'ன்னு கையைப் பிடித்துக் கொண்டு தழுதழுத்தார்!''

'**அ**யோத்தியா' சம்பவத்துக்குப் பிறகு நெருங்கிய நிலையிலிருந்த சில இந்து — இஸ்லாமியக் குடும்பங்களில் சில தர்மசங்கடமான நிலைகளும் உண்டாகியிருப் பது பற்றியும் சொல்லத்தான் வேண்டும். நங்கநல்லூர்ப் பகுதியில் வசிக்கும் பிரபாகரன் குடும்பமும், பக்கத்தில் வசிக்கும் இப்ராஹிம் குடும்பமும் மிகவும் நெருங்கியவை. ''ரம்சான் மாதத்தில், சூரியன் உதிக்குமுன்னரே அவர்கள் சாப்பிட்டு விட வேண்டும். ஒருமுறை, அவர்கள் வீட்டில் நண்பரின் மனைவிக்கு உடல் நலம் சரியில்லை. இரண்டு மகன்களும், என் நண்பரும் நோன்பு அனுசரித்துக் கொண்டிருந்தார்கள். நண்பரின் மனைவிக்கு நோய் குணமாகும் வரை, அவர்கள் தங்கள் நோன்புக்குப் பங்கம் வராமல் சாப்பிட தினசரி, காலை சூரியோதயத்துக்கு முன்னால், நாங்கள்தான் உணவைச் சமைத்து அனுப்பினோம்.

அவ்வளவு நெருக்கம். ஆனால் இப்போது ஏதோ குற்றம் இழைத்தது போல் உணர்கிறேன். அவர்களைப் பார்ப்பதற்கே வெட்கமாக இருக்கிறது. இந்துமத வெறியர்கள், இப்படியொரு இக்கட்டான நிலையைப் பெரும்பாலான இந்துக்களுக்கு உண்டாக்கி விட்டார்களே!'' என்று வேதனைப் படுகிறார் பிரபாகரன்.

குரோம்பேட்டை குமரன் குன்றத்துக்கு அருகே வசிக்கும் சிராஜுத்தின், ''தெற்கே ஒருபோதும், இரண்டு மதத்தைச் சேர்ந்தோர் மத்தியில் மோதல் வரவே வாய்ப்பில்லை'' என்கிறார்.

''கடவுள் மதம் என்பதெல்லாம் அவரவரின் சொந்த நம்பிக்கைகள். அதை அரசியலாக்கும் அரசியல்வாதிகளை மன்னிக்கவே முடியாது'' என்கிறார் சிராஜுதீனின் பக்கத்து வீட்டுக்காரரான சண்முக சுந்தரம்.

''தீபாவளி, கிருஷ்ண ஜெயந்தி போன்ற பண்டிகைகளின் போது பட்சணங்கள் செய்வதற்கு சிராஜுதீன் மனைவி ரஸியா தான் எனக்கு உதவிகள் செய்வார்'' என்று பெருமையுடன் சொல்கிறார் சண்முக சுந்தரத்தின் மனைவி அருணா.

**ம**னம் ஒன்றுபட மதம் தடையில்லை என்று தாம்பத்ய வாழ்க்கையில் நிரூபித்திருக்கிறார்கள் டெலிவிஷன் செய்தி வாசிப்பாளர் ஃபாத்திமாவும் அவர் கணவர் பாபுவும். ''நாம் எப்படி வாழ வேண்டும் என்றுதான் மதங்கள் சொல்கின்றனவே தவிர, அடுத்தவர்களோடு பழகுவதற்கும் அன்பு காட்டுவதற்கும் மதங்கள் ஒருபோதும் தடையாக இல்லையே! ஒருவர் ஒரு குறிப்பிட்ட மதம் என்றால், அந்த மதத்தில் பிறந்ததென்பது அவருக்குக் கிடைத்த ஒரு வாய்ப்பு, அவ்வளவே! உயர்ந்தது, தாழ்ந்தது என்ற பேச்சுக்கே இடமில்லை!'' என்று சொல்கிறார்கள் அவர்கள்.

''**ந**மது வரலாற்றை சற்று திரித்துச் சொல்லி, நம்மைப் பிரித்தாளும் சூழ்ச்சியில் பிரிட்டிஷார் வெற்றி கண்டார்கள். உதாரணமாக கஜனி முகமது கோயில்களை அழித்தான் என்ற பிரசாரம். கஜனி, கோயில்களை மட்டுமா கொள்ளையடித்தான். ஜாதி, மத வித்தியாசம் இல்லாமல் செல்வம் எங்கெங்கிருக்கிறதோ அங்கேயெல்லாம் கொள்ளையடித்தான். ஆனால் இரு சமூகங்களிடையே துவேஷத்தை உண்டாக்க, 'கோயில்களை அழித்தவன் கஜனி' என்ற பிரசாரம். கஜனி ஒரு கொள்ளைக்காரனே தவிர, அரசன் என்று சொல்ல வேண்டியதில்லை. அதே சமயம் அக்பர் போன்றவர்கள் ஆட்சியில், இந்து சமுதாயத்துக்குக் கிடைத்த மரியாதையைப் பற்றி நாம் பெருமை கொள்ள வேண்டும். இதுபோன்ற பாஸிடிவ் விஷயங்களைப் பரப்ப வேண்டும்'' என்கிறார், மத நல்லிணக்க அமைப்பு ஒன்றின் செயலாளரும், ஆற்காடு இளவரசரின் மகனுமான நவாப்ஸாடா முகமது அப்துல் அலி.



● ஆற்காடு இளவரசர் மகன் அப்துல் அலி

1990ல் திருவல்லிக்கேணி பகுதியில், பிள்ளையார் சதுர்த்தி ஊர்வலத்தின் போது நடந்த சில அசம்பாவிதங்களை அடுத்து, பல்வேறு சமயங்களின் நல்லிணக்கத்துக்காக ஆரம்பிக்கப்பட்ட அமைப்பு இது. 'ஹிந்து'ராம் தலைவர். கமலஹாசன் கூட இருக்கிறார்.

''இன்னா செய்தாருக்கும் நன்னயம் செய்வதைத்தான் எல்லா மதங்களும் போதிக்கின்றன; பழிக்குப் பழி வாங்குவதை அல்ல'' என்கிறார் அப்துல் அலி. அயோத்தியா சம்பவத்துக்குப் பிறகு, முஸ்லிம் சமுதாயத்தினரைப் பெருமளவில் சந்தித்து, கோபத்துக்குள்ளாக வேண்டாம் என்று கூறி கலவரச் சூழலை, தவிர்த்த பெருமையும் அப்துல் அலிக்கு உண்டு.

அப்துல் அலியின் முன்னோர்கள் ஆண்டு கொண்டிருந்த போது பல்வேறு ஹிந்து ஆலயங்களுக்கு நிலங்களை வழங்கியுள்ளார்கள். குறிப்பாக ஸ்ரீரங்கம் கோயிலுக்கும், மயிலை கபாலீஸ்வரர் கோயிலுக்கும் நிலங்கள் வழங்கியுள்ளார்கள் ஆற்காடு நவாபுகள். இன்றைக்கும் முகரம் பண்டிகையின் போது 'பஞ்சா'(கை விரல்கள் போன்று வெள்ளியால் செய்தது)வை மயிலை கோயில் குளத்தில் புனித நீராட்டி எடுத்துச் செல்கிறார்கள் முஸ்லிம்கள். மக்கன்லால் கிரன் என்பவர் திவானாக வேலை பார்த்தவர். இவரது சேவையை மெச்சும் விதமாக, திருவல்லிக்கேணி பெரிய மசூதியில் அவரது பெயர் பொறிக்கப்பட்டிருக்கிறது.

''பிஞ்சு உள்ளத்திலேயே ஒற்றுமை உணர்வை ஊட்டி வைக்கும் விதமாக ''ஜாக் அண்ட் ஜில்', ரைம்ஸுக்கு பதிலாக தேச ஒற்றுமை, சமய ஒற்றுமை ஆகியவைகளை வலியுறுத்தும் பாடல்கள் பாலயப் பருவத்திலேயே கற்றுத் தரப்பட வேண்டும்'' என்கிறார் அப்துல் அலி.

'மதமும் அரசியலும் ஒன்று சேரக் கூடாது' என்று வலியுறுத்திச் சொல்லும் இவரது கருத்தைப் பற்றி இந்தியன் யூனியன் முஸ்லிம் லீக்கின் தலைவர் அப்துஸ் சமதிடம் கேட்ட போது, ''மதத்தை மனிதன்

அரசியலில் புகுத்தக் கூடாது என்பது சரிதான். மனிதனை அறநெறிப்படுத்துவது தான் மதம். அப்படிப்பட்டவன் அரசியலுக்கு வந்தால், இரண்டுமே நன்றாக இருக்கும். ஆனால் இப்போது நடப்பதென்ன? 'யோக்கியர்களின் புகலிடம் அரசியல் அல்ல' என்று சொல்லிக் கொண்டு, நல்ல மனிதர்கள் அரசியலில் ஈடுபடத் தவறுவதால்தான் எல்லாம் பாழாகிறது. ஆதலால் நல்லவர்கள் அரசியலுக்கு வர வேண்டும். மதம் கூடாது என்று சொல்வது தவறு. மத வெறிதான் இருக்கக் கூடாது.''

''முஸ்லிம்களுக்கு தனிச் சட்டம், சலுகைகள் என்று கொடுக்கப்படுவதால், மதவெறியைத் தூண்டும் கட்சிகளுக்கு, பெரும்பான்மை மக்களிடையே பிரசாரம் செய்து தூண்டி விடுவது எளிதாக இருக்கிறது. ஆகையால் முஸ்லிம்களையும் உள்ளடக்கி, ஒரு பொது சிவில் சட்டம் கொண்டு வருவதைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்?''

''முஸ்லிம்களுக்குத் தனிச் சட்டம் இருப்பதால் இந்துக்களுக்கு என்ன பாதகம்? அவர்களுக்கு மட்டும்தான் தனிச் சட்டம் இருக்கிறதா என்ன? இந்த நாட்டில் இந்துக்கள், கிறிஸ்துவர்கள் மற்றும் வேறு சில வகுப்பினர்களுக்குப் பொருந்தக்கூடிய அளவில் 36 தனிச் சட்டங்கள் இருக்கின்றன. சரி, இந்த தனிச் சட்டங்கள் எதற்கு? திருமணம், சொத்துரிமை போன்றவற்றில் மக்களுடைய, குறிப்பாகப் பெண்களுடைய நலனைப் போற்றுவதுதான் இச் சட்டங்களின் சிறப்பு. கடவுளால் அருளப்பட்ட எங்கள் ஷரியத்தில் (ஷரியத் - செப்பனிடப்பட்ட பாதை) எல்லா விஷயங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. இன்னமும் சொல்லப் போனால், பெரும்பாலான ஹிந்து மக்களுக்கு, சுதந்திரம் கிடைத்த பல வருடங்களுக்குப் பிறகுதான், பயனளிக்கும் விதமாக சொத்து, திருமணச் சட்டங்கள் திருத்தப்பட்டன. ஆனால் இவையெல்லாம் முன்பே எங்கள் ஷரியத்தில் இருக்கின்றன. ஒருமுறை சி. பி. ராமசாமி அய்யர் சொன்னார் : ''இந்து சட்டங்களை நாம் திருத்திக் கொண்டு வருவதை விட, இஸ்லாமிய தனிச் சட்டத்தைப் பொதுவாக வைத்து விடலாமே!''

''அப்படியென்றால் ஷாபானு வழக்கில் கோர்ட்டு ஜீவனாம்சம் கொடுக்க வேண்டும் என்று சொல்லியும், அது ஷரியத்துக்கு விரோதமானது என்று அன்று மதவாதிகள் சொன்னார்களே. அவர்கள் குரலுக்கு அன்று இருந்த ராஜீவ் காந்தி அரசும் கட்டுப்பட்டதே?''

''சுப்ரீம் கோர்ட் தலைமை நீதிபதி சந்திரசூட், முஸ்லீம்கள் தனிச் சட்டத்தை நீக்க வேண்டும் என்று சொல்லவில்லை. அவருடைய வாதம் தவறாக இருந்தது.












Islamic Law என்ற புத்தகத்தை அடிப்படையாக வைத்து அவர் தீர்ப்பு வழங்கினார். ஆனால் துரதிருஷ்டவசமாக அவர் பார்வைக்கு வந்த அந்த புத்தகத்தில் தவறுகள் இருந்தன. அதனால் தீர்ப்பிலும் முரண்பாடுகள் இருந்தன. பின்னர் அந்த புத்தகம், அடுத்த பதிப்பில் சரியாகத் திருத்தப்பட்டது. மேலும் இஸ்லாமிய சட்டத்தின்படி, திருமணத்தின் போது 'மகர்' என்று சொல்லப்படும் பணம் மாப்பிள்ளை சார்பாக பெண்ணுக்குக் கொடுக்கப்பட வேண்டும் என்று குறிக்கப்படும். திருமண முறிவின் போது அந்த பணத்தை பெண்ணுக்குக் கொடுத்து விட வேண்டும்; அவ்வளவுதான். முறிவுக்குப் பின், அந்த பெண் மறு திருமணம் செய்து கொள்ளலாம். அதாவது அந்தப் பெண் அந்தக் கணவனிடமிருந்து முற்றிலுமாக விடுதலை பெற்று விடுகிறாள் என்கிற போது ஜீவனாம்சத்திற்கு இடமேது? அந்த நிலையில் கணவனிடமிருந்து பணத்தை எதிர்பார்ப்பது அவமானம் என்று கருதப்படும்.''

''முஸ்லிம்கள் ஒன்றுக்கு மேற்பட்ட பெண்களைக் கல்யாணம் செய்து கொள்ளலாம் என்றும், ஆபரேஷன்கள் செய்து கொள்வது மதவிரோதம் என்றும் சொல்லப்படுகிறதே! இதனால் 'அவர்கள் பாட்டுக்குக் குழந்தைகளைப் பெற்றுக் கொண்டே போகிறார்கள். ஒரு காலகட்டத்தில், கட்டுப்பாடுகளை அனுசரிக்கும் நீங்கள் மைனாரிடிகளாக ஆகி விடுவீர்கள்' என்று மற்றவர்கள் பிரசாரம் செய்கிறார்களே?''

''மறுபடியும் தவறான கண்ணோட்டம். ஒருமுறை சட்டமன்றத்தில் நாங்கள், அனைத்துக் கட்சிகளையும் சேர்த்து ஆறு முஸ்லிம் உறுப்பினர்கள் இருந்தோம். அப்போது உறுப்பினர் ஒருவர் முஸ்லிம்கள் நான்கு மனைவிகளை வைத்துக் கொள்கிறார்கள் என்று பேசினார். உடனே நான் எழுந்து, 'இங்குள்ள முஸ்லிம் உறுப்பினர்களுக்கு ஒரு மனைவிதான். ஆனால் ஆளும் கட்சிப் பிரமுகர்களும், மந்திரிகளும் எப்படி நடந்து கொண்டிருக்கிறார்கள் என்று சொல்லவா?' என்று கேட்டவுடன் 'வேணாம் அண்ணே' என்று குரல்கள் எழுந்தன. அதே போல் குழந்தை பெறுவது. பிறக்கும் ஒவ்வொரு குழந்தையும் மனித சமுதாயத்தை நீட்டிப்பதில் கடவுளுக்கு உள்ள நம்பிக்கையைத்தான் காட்டுகிறது. 'மாடுகள் தனது கொம்புகளில் உணவைக் கட்டிக் கொண்டு அலைவதில்லை' என்று சொல்வார்கள். அது போல enough for our need, not for our greed. ஒரு புள்ளி விவரத்தின்படி, முஸ்லிம்கள் அதிகமாக வாழும் காஷ்மீரில் தான் பிறப்பு விகிதம் குறைவாக இருக்கிறது. கடைசியாக, இப்போதிருக்கும் பொருளாதாரச் சிக்கலில், இரண்டாவது குழந்தை பெற்றுக் கொள்வதைப் பற்றி முஸ்லிம்கள் உட்பட அனைவரும் யோசிக்கிறார்கள். நான்கு மனைவிகளைப் பற்றியெல்லாம் நினைத்துக் கூட பார்க்க முடியாது!'' என்று சொன்ன அப்துல் சமது,

''இந்துக்கள் எல்லோருமே ஒட்டுமொத்தமாக முஸ்லிம்களுக்கு விரோதமாக மாறி விடவில்லை. இந்துக்களில் சிறுபான்மைக் கூட்டம் தனது வெறித்தனத்தைக் காண்பித்திருக்கிறது. ஆனால் காலம் காலமாக இருந்து வரும் உறவை இவர்களால் குலைக்க முடியாது. தில்லை நடராஜருக்கு நகைகள் செய்து போட்டவர் திப்பு சுல்தான். நாகூர்தர்காவின் ஒரு கோபுரத்தைக் (மினார்) கட்டிக் கொடுத்தவர் சரபோஜி ராஜா. மேலும் தஞ்சை மாவட்டத்தில் பல பள்ளி வாசல்கள் கட்ட நிலம் கொடுத் திருப்பது அங்குள்ள இந்து மடங்கள்தான்!'' என்றார்.

அட்டையிலுள்ள சுகன்யாவும் அஃப்ஷான் யாகூபும் நெருங்கிய சிநேகிதிகள்.

''அப்போதும், இப்போதும் - ஏன், எப்போதுமே இந்த நட்பில் மதம் ஒரு பிரச்னையாகவே இருந்ததில்லை. ''நான் கஸல்களை ரசிப்பது போல தமிழ்ப் பாட்டுக்களையும் ரசிப்பேன்'' என்று அஃப்ஷான் சொன்ன போது, ''நானும் அப்படித்தான். ஜக்ஜித் சிங் கஸல்களை வெகுவாக ரசிப்பேன்!'' என்றார் சுகன்யா.

வட இந்திய அலங்காரக் கலையில் சிறப்பான இடம் வகிக்கும் மெஹந்தி (மருதாணி)யை, தங்கள் நட்பின் சின்னமாக, அஃப்ஷானின் கையில் இடுகிறார் சுகன்யா.

– சாருகேசி, ஸ்ரீநிவாசன்
அட்டை வண்ணப்படம் :
எஃப். ஸ்டாப்

## அடுத்த இதழில்...

●● சேரிகளில் உழைக்கும் இளம் விஞ்ஞானி!
- சிறப்புக் கட்டுரை

●● தண்டுவடம் தரும் திருகுவலிகள்
- மருத்துவ ரிப்போர்ட்

# புண்ணிய காரியங்களை ஸங்கிராந்தியில் ஏன் அனுஷ்டிக்க வேண்டும் ?



மேஷம் முதலிய பன்னிரெண்டு ராசிகளில் கிரமமாக மாதந்தோறும் சஞ்சரிக்கும் சூரிய பகவான்.

ஒரு ராசியிலிருந்து வேறு ராசிக்கு பிரவேசிக்கின்ற சமயம் ஸங்கரமணம் ஸங்கிராந்தி என்று சொல்லப்படுகிறது. அந்தப் புண்ணிய காலங்களில் செய்கிற ஸ்நானம், தானம், ஹவ்யம், கவ்யம், முதலிய புண்ணிய காரியங்களுக்கு ஏழு வருஷம் சூரியன் நல்ல பலன்களைக் கொடுக்கிறார். ஆகையால் புண்ணிய காரியங்களை அவசியம் அனுஷ்டிக்க வேண்டும்.

தேவலர் : ஸங்கராந்தி சமயம் சூட்க்ஷமமானது. நம்மால் அறிய முடியாதது. ஆகையால் ஸங்கரமணத்திற்கு முன்பு முப்பது பின்பு முப்பது நாழிகைகள் புண்ணிய காலமாகும்.

| ராசி | ஸங்கிரமணத்தின் நாமதேயம் | (ப்ருஹஸ்பதி வாக்குப்பலன்) புண்ணிய காலம் | புண்ணிய பலன் |
|---|---|---|---|
| மகரம் | உத்திராயணம் | பின் இருபது நாழிகை | கோடி புண்ணியம் |
| கும்பம் | விஷ்ணுபதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மீனம் | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மேஷம் | விஷீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| ரிஷபம் | விஷ்ணுபதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மிதுனம் | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| கர்கடகம் | தக்ஷிணாயனம் | முன் இருபது நாழிகை | கோடி புண்ணியம் |
| சிம்மம் | விஷ்ணுபதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| கன்னி | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| துலா | விஷீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| விருச்சிகம் | விஷ்ணுபதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| தனுசு | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |

- ஸம்க்ஷேப தர்மசாஸ்திரம்



திரௌபதி வஸ்திர வாபங்கள்



கவிமணியின் கவிதைகள்

● டீ. வி. சரித்திரம் என்று யாராவது, எப் போதாவது எழுதி னால் அதில் பொன், வைரம் இவ்வபிர எழுத்துக் களில் பொறிக்கப்பட வேண்டியது, புதன் இரண்டாவது சேனலில் ஒலி பரப்பாகிய Tele Quiz. நடிகை கஸ்தூரி (தம்பூர் இங்கிலீஷ்!) மற்றும் சுமந்த் ராமன் ஆகியோரின் நேரடி கேள்விகளுக்கு நேயர்கள் டெலி போனில் பதில் சொன்ன வேகம்,

# போலீஸை நோக்கி வீசிய கண்ணீர்ப் புகைக் குண்டு!

இடையிடையே நொறுக்குத் தீனி யாக கஸ்தூரி வழங்கிய சிறு குறிப்பு கள் யாவும் விழி உயர்த்தச் செய்தன — இது நம்மூர் டீ.வி.தானா என்று.

● பற்பல நிகழ்ச்சிகளுக்கு நடுவே இலக்கியத்துக்கும் கொஞ் சம் நேரம் ஒதுக்க விரும்பும் செ. தொ. காட்சியைப் பாராட்ட வேண் டும். ஆனால், அதற்கு அவர்கள் தேர்ந்தெடுக்கும் நபர்கள்தான் பெரிதும் சொதப்புகிறார்கள். புதன் இரவு கவிமணியின் கவிதைகள் பற்றி சீவி. திருநாவுக்கரசு மற்றும் இரு அம்மணிகள் கலந்துரையா டினர். அவரவர் தமக்குத் தெரிந்த வரிகளை ஒப்பித்து வழிவது பார்க்கச் சகிக்கவில்லை. சாமானி யருக்கும் இலக்கிய அறிமுகம் என்பது வெறும் உரையாடலாக இருந்தால் இருக்கிற இலக்கிய ஆர்வமும் போய்விடும். யோசித்து விசேஷமாகச் செய்ய வேண்டும். டீவியை ரேடியோ ஆக்காதீர்கள்.

● தூக்கம் போனால் பரவா யில்லை என்றால் உங்களுக்குச் சில அற்புத நிகழ்ச்சிகள் டீ.வியில் அவ்வப் போது கிடைக்கும். வியாழன் இரவு மேரி நெல் என்னும் ஜெர் மானியப் பெண் பாடினார் பாருங்கள் — அது குரலோ? குழலோ? கலை டாஸ்கோப் ஜால மாய் பொங்கிப் பெருகிய 'பிருகா'க்கள் - குரல் வளையின் டைப்ரைட்டர்! அது பாப் ம்யூஸிக் அல்ல - டாப் ம்யூஸிக்!

● பிரும்மாண்ட டைபின் ஞாயிறு ஆரம்பித்து விட்டது. முதல் தடை மீறல், முதல் புறம் போக்கு நிலம் வளைத்தல், முதல் கொலை இந்த வாரம். குறிப்பிட வேண்டியது இசையும், ஒளிப்பதிவும். வாரம் ஒரு இயக்குனராம். நம் ஊர் பிரதாப் போத்தன் கூட இயக்குவதாகக் கேள்வி.

● அந்த வாரத் திரைப்படம் உயிரா, மானமா. பொருத்தமில்லாப் பாடல்கள் மற்றும் கே.எஸ். ஜியின் திரௌபதி வஸ்திர வாபங்களைச் சற்று மறந்துவிட்டால் உருப்படியான ஒரு படம். திரைக்கதை வேகம் திகைக்க வைத்தது.

● பி.பி.சி.யின் முடிவேயில்லா செய்திகளில் அதிகம் அயோத்தி. வாஜ்பாயி யின் வீர உரை, மற்றும் போலீஸை நோக்கி (?) கண்ணீர்ப் புகை குண் டெறியும் தொ(கு)ண்டர் படை. உலகம் சிரிக்க ஒரு வாய்ப்பு.

வீர உரை

● 'அ றி வி ய ல் ஆயிரம்' நிகழ்ச்சியில் வலியில்லாத லேசர் ஆப் ரேஷன் — வியக்க வைக்கும் விஞ்ஞான வளர்ச்சி! இதற்கு ஆகக் கூடிய செலவு பற்றி ஒரு வார்த்தை சொல்லியிருக்கலாம்.

● ஸ்டார் பிளஸ்'ஸில் ஞாயிறு மாலை 'Miss World' போட்டி. (டிசம்பர் குளிர் போதாதா?) போட்டியாளர்களிடம் இடையிடையே 'உங்களுக்கு மீண்டும் பிறக்க ஒரு வாய்ப்புக் கொடுத்தால் அழ காகப் பிறக்க விருப்பமா, அறிவோடு பிறக்க விருப்பமா' என்பது போன்ற நடுவர் களின் தமுட்டுக் கேள்விகள். கடைசியில் ஜெயித்தவர் 18 வயது ரஷ்ய மெழுகு பொம்மை!

— கிச்சா

# Vமர்சனம்

## எமது இனிய புத்தாண்டு நல்வாழ்த்துக்கள்



### நிலையான,
### நிறைவான வருமானம்...
### நிம்மதியான,
### நிச்சயமான பாதுகாப்பு!

# AROOR INTEGRATES FINANCE CORPORATION

Admn. Office: No. 6, Kannadasan Salai, T.Nagar, Madras-600 017. Ph: 442965

**LEASING ■ HIRE PURCHASE ■ DEPOSIT ■ PROPERTY LOAN**

## பிக்சட் டெபாசிட் திட்டங்கள்

| திட்டம் A: மாத வருமான திட்டம் | |
|---|---|
| காலம் | வட்டி விகிதம் |
| 12 மாதங்கள் | 18% |
| 24 மாதங்கள் | 19% |
| 36 மாதங்கள் | 21% |

**பென்சன் தாரர்களுக்கு 1% கூடுதல் வட்டி**

ஒரு வருட டெபாசிட்டுக்கு 2 சதவிதமும், இரண்டு வருடங்களுக்கு மேற்பட்ட டெபாசிட்டுகளுக்கு 4 சதவிதமும் ஊக்கத்தொகை அளிக்கப்படுகின்றது.

| திட்டம் B: முதலீடு பெருகிடும் திட்டம் | | |
|---|---|---|
| காலம் | ஆரம்ப முதலீடு | கால முடிவில் பெருகும் தொகை |
| 25 மாதங்கள் | 1000/- | 1,442/- |
| 36 மாதங்கள் | 1000/- | 1,683/- |
| 48 மாதங்கள் | 1000/- | 1,986/- |
| 60 மாதங்கள் | 1000/- | 2,338/- |

**உங்கள் முதலீடு 48 மாதங்களில் இரு மடங்காகின்றது**

## • சிறப்பு அம்சங்கள்

■ முதலீட்டை திரும்பப்பெற உத்திரவாதம் அளிக்கப்படுகின்றது ■ மாதாந்திர வட்டி ■ வட்டிக்கும், முதலீட்டை திரும்ப பெறுவதற்கும் முன் தேதியிட்ட காசோலைகள் வழங்கப்படுகின்றன ■ வெளியூர்களிலுள்ள டெபாசிட்தாரர்களுக்கு வட்டியும், முதலீட்டை திரும்ப பெறுத்தும் பாங்க் டிராப்ட் (D.D.) மூலம் வழங்கப்படுகின்றது ■ உங்கள் முதலீடுகள் பாதுகாப்பான முறையில் மறுமுதலீடு செய்யப்படுகின்றது.

## ஆரூர் இண்டகரேட்ஸ் பைனான்ஸ் கார்ப்பொரேஷன்



நெ. 6, கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை-600 017. போன்: 442965

சுப்ரமண்ய சுவாமி
ஜொள்ளர்...
இன்கம்டாக்ஸ்? தப்பிஓடியவா...??
டான்ஸி ஊழல்!...
பாங்கு பத்திர ஊழல்!...
அனுமதி இல்லாமல் வெளிநாடு ஓடியவர்?
ஜொள்ளர்ர்ர்...
மரியாதையா ரிங் மாஸ்டர் டிரஸ்ல வந்து அந்தப் புலிய அடக்குங்க... இல்லே, என்னோட பூனைங்-களெல்லாம் என்ன பண்ணுமோ எனக்கே தெரியாது— அப்புறம், புலிய கடிச்சிருச்சி, கொன்னுச்சி-ன்னு சொல்லக் கூடாது...!
இந்தாங்க, உங்க நம்பிக்கை இல்லாத் தீர்மானம்...! நீங்களே வச்சிக்குங்க... உங்களை விட அவருக்கிட்டேயே மக்களுக்கு நம்பிக்கை அதிகமா இருக்கு!
நாடாளு மன்றம்
அத்வானி
பிரதமர்
என்ன ஆளுடி இந்த சவாண்? போனாராம், சந்திச்சாராம், ஜூஸ் குடுத்திருக்காராம்... அந்த ஆளும் உண்ணா விரதத்தைக் கை விட்டுட்டாராம்...
தினச்செய்தி
சவான் சந்திப்பு! வாஜ்பாயி உண்ணா-விரதம் வாபஸ்!
அதானே?... எதிர்த்தாப்புல நாலு காங்கிரஸ்-காரங்க உட்கார்ந்து கோழி பிரியாணியும், மட்டன் பிரியாணியும் ஒரு பிடி பிடிக்கறதை விட்டுப்புட்டு...?
சசிகலா



# கல்கி



1993
ஜனவரி 3
மலர் : 51
இதழ் : 23
ஆங்கீரச
மார்கழி 19

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்.

## புத்தாண்டு வாழ்த்து! புலம்பல்களுக்கு முடிவு?

கல்கி நேயர்களுக்குப் புத்தாண்டு வாழ்த்துக் கூறும் இச் சமயத்தில், சென்னையில் சங்கீத விழாக்கள் போட்டி போட்டுக் கொண்டு நடந்து வருகின்றன. கிருஷ்ணகான சபையில் பேசிய திருவிதாங்கூர் இளையராஜா ஓர் அழகிய கிரேக்க நாட்டுக் கதை கூறினார் :

ஒரு மன்னர், கலைகளில் சிறந்த தமது மகளுக்கு, அவளைப் போலவே கலை ஆர்வம் மிக்க ஒரு மணமகனைத் தேர்ந்தெடுக்கக் கருதி அறிவிப்புச் செய்தார். ஏராளமானவர் தங்கள் ஆற்றலைக் காட்ட முன்வந்தனர். பலரையும் ஒதுக்கி, கடைசியில் ஒருவனது நடனம் ஈடுஇணையற்றது என்று கண்ட மன்னர் மகிழ்ந்து, ''ஆடியது போதும் அப்பா'' என்றார். ஆனால் அவனோ நிறுத்தவேயில்லை! ''அற்புதமாகத்தான் ஆடுகிறாய்; ஆனால் என் உத்தரவுக்கும் பணியாமல் இப்படி ஆடிக் கொண்டேயிருந்தால் என் மகளை இழப்பாய்!'' என்றார் மன்னர், கோபமாக. ''கவலை இல்லை'' என்றான் கலைஞன். ''எனக்குக் கலைதான் முக்கியம்; கல்யாணமல்ல!''

அரச குமாரியை விட, சாம்ராஜ்யத்தை விட, கலையையே பெரிதாக எண்ணி, அதிலேயே அக் கலைஞன் மூழ்கிப் போனது போல்தான் நாமும் இருக்க வேண்டும். கலைத் துறையில் மட்டுமின்றி, எல்லாத் துறைகளிலும் இத்தகைய மெய்மறந்த ஈடுபாடும், பலன் எதிர்பாராத கடமை உணர்வும் நம் ஒவ்வொருவரிடமும் இருக்குமானால் 1993 முதல் நம் நாடு மேன்மையுறத் தொடங்கி, உலக அரங்கில் உன்னத இடத்தைப் பெறும்.

இசை அரங்கங்களில் மட்டும் சங்கீதம் ஒலித்தால் போதாது. நம் இதயங்களில் ஒலிக்க வேண்டும். இசை ஒலிக்கும் இதயம் நம் வாழ்க்கையை இசைவுடையதாகச் செய்யும். ஜாதி, மத பேதங்கள் என்ற உணர்வே இன்றி நாம் அனைவரும் இசைபட வாழ்ந்து அமைதி காக்க முடியும். அமைதி நிலவும் நாட்டிலேதான் தொழில் - பொருளாதாரச் சாதனைகள் நிகழும். 1993 இதற்கு வரவேற்புக் கூறட்டும்.

விசுவ ஹிந்து பரிஷத், சிவசேனா, ஆர். எஸ். எஸ். போன்ற அமைப்புகளிடமிருந்து விட்டு விடுதலையாகி, கிரகணம் நீங்கிய சூரியன் போல் பிரகாசிக்க இப்போது பி.ஜே.பிக்கு ஓர் அரிய வாய்ப்பு. ''தவறு என்னமோ நடந்து விட்டது. இதில் நாங்கள் ஏமாற்றப்பட்டோம். இவ்வாறு ஏமாற்றியவர்களுடன் இனி தொடர்பு கொள்ள மாட்டோம்'' என்று வெளிப்படையாகக் கூறி சுலபமாகக் கழன்று கொள்ளலாம். அனைத்துத் தரப்பு மக்களின் நன்மதிப்பையும் மிக எளிதில் இதன் மூலம் பெறலாம். காந்தியப் பொருளாதாரக் கொள்கையே பி.ஜே.பியின் பெரிய பலம். அதை மேலும் செம்மைப்படுத்தி, இன்னும் பல சீரிய கொள்கைகளை வகுத்து, இன்று பயனுள்ள எதிர்க்கட்சியாகவும், நாளை நாட்டை உயர்த்தும் ஆளும் கட்சியாகவும் விளங்கலாம். 'பி.ஜே.பி., கொள்கை அரசியலுக்குத் திரும்ப வேண்டும்; துவேஷ அரசியலை ஒதுக்க வேண்டும்' என்பதே அதன் நலனில் அக்கறை கொண்டுள்ளவர்களின் கோரிக்கையாக இருக்க முடியும். இதை ஏற்காமல், சிறை நிரப்பும் போராட்டம் நடத்துவது, சட்டம் - ஒழுங்கைக் குலைத்து, ஆட்சியை எப்படியும் கலைத்தே தீருவது என்ற நோக்கில் செயல்பட்டால் இருக்கிற அனுதாபமும் போய் விடும். மற்ற எல்லாக் கட்சியினரும் 'பி.ஜே.பி. எதிர்ப்பு' என்ற ஓர் அம்சத்தில் மட்டுமேனும் ஒன்றுபட, பி.ஜே.பி. ஓரம் கட்டப்படும்.

நம்மை நாலாபுறமும் முஸ்லிம் நாடுகளே சூழ்ந்திருக்க, இங்குள்ள முஸ்லிம்களின் மனம் நோகச் செய்வதும் பகை உணர்வை வளரச் செய்வதும் சாணக்கியம் ஆகாது. நாட்டுக்கே பேராபத்தாகும். தீர்க்க தரிசனம் இல்லாதவர்கள்தாம் அந்தத் தவறைச் செய்வார்கள். இதை பி.ஜே.பி. உணராவிட்டாலும் மக்கள் உணர்ந்திருக்கிறார்கள். அவர்களை சிநேகப்பான்மையிலிருந்து திசை திருப்ப நடத்தப்படும் முயற்சிகள் எதிர்ப்பையே சந்திக்கும்; தோல்வியையே தழுவும்.

1993 தமிழகத்திலும் ஓர் ஆரோக்கியமான மாற்றத்தை உருவாக்க வேண்டும் என்று ஆவலுடன் எதிர்பார்க்கிறோம். ''ஆட்சியைக் கலைக்கும் உத்தேசமில்லை, சு. சுவாமிக்கும் காங்கிரஸுக்கும் சம்பந்தமில்லை'' என்று பல முறை பிரதமர் கூறியாகி விட்டது. ஆயினும் திரும்பத் திரும்ப, ''சுவாமியை அடக்கலையே; ஆர்மியை அனுப்பலீங்களே'' என்றெல்லாம் புலம்புவதும், ''மத்தியில் ஆட்சியா நடக்கிறது?'' என்று சட்ட மந்திரியே சாடுவதும் அழகல்ல. ''அ.இ.மு.க. கட்சித் தொண்டர்களை என்னால் கட்டுப்படுத்த முடியாது'' என்று முதல்வர் கூறுவது, தன் தகுதியின்மைக்குத் தானே ஒப்புதல் வாக்குமூலம் தருவதாகும். இத்தகைய ஒப்பாரிகளையெல்லாம் ஒதுக்கி வைத்து விட்டு, முதல்வர் 1993ல் திறமையான ஆட்சி நடத்தி, மக்கள் மனங்களில் மீண்டும் இடம்பெறட்டும்.

# நினைவில் நிற்கும் 100 பேர்கள்!

**1992 இல் குறிப்பிடத் தகுந்த செயல்கள் புரிந்ததன் மூலம் நம் நினைவில் நிற்பவர்கள். இதில் வாசகர்கள் யோசனையுடன் கல்கி ஆசிரியர் குழாத்தின் தேர்வும் இணைந்திருக்கிறது.**



1. மேஜர் கிரிஸ்டோ : 'கேபிள் கார்' விபத்தில் பயணிகளைக் காப்பாற்றியவர்



2. மணிரத்னம் : 'ரோஜா' படம்.



3. ஜெயலலிதா : விடுதலைப் புலிகள் மேல் நடவடிக்கை



4. நரசிம்மராவ் : குறைந்த மெஜாரிட்டியிலும் ஆட்சியில் நீடிப்பவர்



5. மன்மோகன் சிங் : துணிவான பொருளாதாரச் சீர்திருத்தம்.



6. ப. சிதம்பரம் : துணிவான தொழிற் கொள்கைகள்.



7. வைரமுத்து : சிகரங்களை நோக்கி - கவிதை நூல்.



8. உதவும் கரங்கள் வித்யாகர் : அரசு உதவியின்றிச் சிறந்த சமூக சேவை



9. கே. பி. எஸ். கில் : பஞ்சாப் போலீஸ் தலைமை அதிகாரி



10. மு. கருணாநிதி : தோல்வியிலும் தளராமல் எதிர்க்கட்சிப் பணிகள்.



11. கீத் சேத்தி : பில்லியர்ட்ஸ் உலக சாம்பியன்



12. கபில் தேவ் : ஹேட்லி சாதனையையும் கடந்த விக்கெட் சாய்ப்பு



13. லதா மங்கேஷ்கர்: இசைத் துறையில் பொன்விழா



14. எம். எஸ். சுப்புலக்ஷ்மி : வயதைப் பொருட்படுத்தாமல் இசைத் துறையில் சாதனை; சேவை



15. மாண்டலின் ஸ்ரீநிவாஸ் : ஒலிம்பிக்ஸ் கலையரங்கில் நிகழ்ச்சி



16. எம். எஸ். உதயமூர்த்தி : பாதயாத்திரையின் மூலம் விழிப்புணர்ச்சி



87. அசோக் சிங்கல் : வி. ஹெச். பி. தலைவர்



88. அம்ரே : டெஸ்ட் பிரவேசத்தில் செஞ்சுரி



89. லக்ஷ்மி மேனன் : பொதுத் துறையில் ஒரே பெண் சேர்மன்



90. குஷ்பு : ஆலயம் கட்டும் அளவுக்குப் பாபுலாரிட்டி



91. சுபாஷ் மகோபாத்யாய : ஞானபீட அவார்டு



92. மேத்தா பட்கர் : சுற்றுச் சூழல் போராட்ட வீராங்கனை



93. முரளி மனோகர் ஜோஷி : பி. ஜே. பி. தலைவர்



94. பார்கவா : மாருதி 1000 மாடல் கார்



95. சுதாகர் நாயக் : பவார் ஆதரவு அமைச்சர்களை உதறிய முதல்வர்



96. பூர்ணம் விஸ்வநாதன் : நாடக சூடாமணி, சங்கீத நாடக அகாடமி விருது



97. ஜி. ராமசாமி : பங்கு பத்திர ஊழலுக்காக அட்டர்னி ஜெனரல் பதவி ராஜினாமா



98. அத்வானி : பாபர் மசூதி இடிக்கப்பட்டதற்கு ஏமாந்து போனோம்; பொறுப்பேற்கிறோம் என்று வருத்தியவர்



99. அருண் பூரி : இந்தியா டுடே, பிராந்தியப் பதிப்புகள் (லேட்டஸ்ட் குஜராத்தி பதிப்பு)



100. உங்கள் நோக்கில் நிச்சயம் இங்கு இடம் பெற வேண்டிய ஒருவர்!

---



''நம்ம ஆசாரி அய்யாக் கண்ணு மாதிரி பிழைக்கத் தெரிஞ்சவங்க யாருமே இருக்க முடியாது.''

''எப்படிச் சொல்றீங்க?''

''இவ்வளவு நாளா 'கட்-அவுட்' செய்துக்கிட்டிருந்தவர், இப்பல்லாம் தொட்டில் செய்ய ஆரம்பிச்சிட்டாரே!''

- சீர்காழி வி. ரேவதி

!! பொலிவியாவில் உள்ள லா பாஸ் (La Paz) என்ற இடத்தைச் சென்றடையும் பெரும்பாலான அயலூர்க்காரர்களுக்கு உடல்நலக் குறைவு ஏற்படும். காரணம், கடல் மட்டத்திலிருந்து 11,900 அடி உயரம் உள்ள லா பாஸ் தான் உலகின் மிக உயரமான நகரம். இதனால் இதயக் கோளாறு, ப்ராங்கைடிஸ் உள்ளவர்கள் அங்கு போக வேண்டாம் என்று எச்சரிக்கப்படுகிறார்கள். ஆரோக்கியமானவர்கள் கூட ஏதேனும் ஒரு வகையில் அவதியுற நேருகிறது.



!! மாஸ்கோவில் மட்டுமல்ல, ரஷ்யாவில் பல நகரங்களில் கிரெம்லின்கள் உள்ளன. 'கிரெம்லின்' என்பது ஒரு நகரத்தின் அரசு அலுவலகம் அமைந்துள்ள கட்டடத்தைக் குறிக்கும். 'கோட்டை' என்ற பொருள்படும் பழைய ரஷ்யச் சொல்லிலிருந்து உருவானது தான் 'கிரெம்லின்' என்கிற வார்த்தை.

# குழப்பம் விளைவித்த குல்லாய்!



!! மிகச் சிறிய வயதில் போப்பாண்டவராகப் பதவி ஏற்றவர் ஒன்பதாம் பெனடிக்ட். 1032 ஆம் ஆண்டு தனது பதினோராம் வயதிலேயே இவர் அப்பொறுப்பை ஏற்றார்!

!! ஆதி காலத்தில் யூதர்களும் கிறிஸ்தவர்களும் அந்திப் பொழுதில்தான் ஒருநாள் துவங்குவதாகக் கருதிச் செயல்பட்டார்கள். 'கிறிஸ்மஸ் ஈவ்' என்றும் 'நியூ இயர்ஸ் ஈவ்' என்றும் இன்று நாம் அந் நாட்களின் முன் தின மாலைப் பொழுதைக் குறிப்பிடுகிறோம். ஆனால் முன் காலத்தில் கிறிஸ்துமஸ், புதுவருட தினங்கள் அந்த நேரத்தில்தான் ஆரம்பித்தன.

!! ஒரு சிறிய ரப்பர் படகில் தன்னந்தனியாக அட்லான்டிக் கடலைக் கடந்த பிரெஞ்சுக்காரர் அலெய்ன் பம்பார்ட் (Alain Bombard), இனம் காண முடியாத ஒரு கடல் பிராணி தனது படகைத் தொடர்ந்து வந்ததாகத் தெரிவித்தார். இது 1952 இல் நடந்தது.

!! 1797 ஆம் ஆண்டு லண்டன் வீதியில் நடந்து சென்ற ஜேம்ஸ் ஹெதரிங்டனைச் சுற்றிக் கூட்டம் கூடியது. நாய்கள் அவரைப் பார்த்துக் குரைத்தன; குழந்தைகள் அலறினார்கள். நடந்த கலாட்டாவில் ஒரு ஆசாமியின் கை முறிந்தது! ஹெதரிங்டன், நகரின் அமைதியைக் குலைத்ததற்காகக் கைது செய்யப்பட்டார். அவருக்கு ஐம்பது பவுண்டு அபராதம் விதிக்கப்பட்டது... இவ்வளவுக்கும் காரணம் அவர் தலையில் அணிந்திருந்த உயரமான தொப்பிதான். கருப்பு நிறத்திலான அந்த Top hat ஐப் போல் ஒன்றை அதுவரை யாருமே பார்த்திருக்கவில்லை. அதனால் விளைந்த பயமும் குழப்பமும் தான் இவ்வளவு துன்பம் ஏற்படக் காரணமாயிருந்தன. பின்னால் டாப்ஹேட் மிகப் பிரபலமாகி முக்கிய நிகழ்ச்சிகளுக்குக் கனவான்கள் அணிவதாகி விட்டது.

!! மேற்கத்திய நாடுகளில் மரணத்தோடு தொடர்புபடுத்தப்படும் நிறம் கறுப்பு. இறுதிச் சடங்குக்குச் செல்வோர் கறுப்பு ஆடைகள்தான் அணிவர். சீனாவிலோ அத்தகைய சந்தர்ப்பங்களில் வெள்ளை ஆடை அணிவதே வழக்கம். மறு உலகில் மகிழ்ச்சி, வளமை போன்றவற்றை வெண்மை குறிக்கும் என எண்ணுகிறார்கள்.

!! 300 எலும்புகளுடன் பிறக்கும் குழந்தையின் 94 எலும்புகள், குழந்தைப் பருவத்தில் ஒன்றோடொன்று இணைந்து போய் விடுகின்றன. இதற்கேற்ப மனித உடலில் எலும்புகளின் எண்ணிக்கை குறைகிறது.

!! வளர்ச்சியுற்ற மனிதனின் மென்மையான மூளை ரத்தத்திலுள்ள பிராண வாயுவில் 25 சதவிகிதத்தை எடுத்துக் கொண்டாலும் அது அசைவதோ, அளவில் பெரிதாவதோ, சுருங்குவதோ இல்லை.

!! ● கலிபோர்னியாவில் உள்ள 'Death valley' என்ற இடத்தில் 134 டிகிரி பாரன்ஹீட் வெப்பநிலை பதிவாகியது 1913 இல். இதற்குச் சில ஆண்டுகள் கழித்து 1922 இல், லிபியாவில் 136.4 டிகிரி ஃபாரன்ஹீட் வெப்பநிலை பதிவாயிற்று. இதுவே உலக ரிகார்டு!

தொகுப்பு : உதய்லால்

# 23

இரண்டாவது பேரிடி, இது. இந்த இரண்டாவது பேரிடி, காலடித் தரையை உடைத்துத் தூளாக்கி அவளை அந்தரத்தில் தூக்கி வீசி விட்டது.

சொர்ணம் இப்படி நினைக்கவில்லை. இம் மாதிரி நிகழ்ச்சி திசை மாறும் என்று எதிர்பார்க்கவேயில்லை. நம்ப முடியாமல் திணறினாள். 'அம்மாவா இப்படி? அம்மாவுமா இப்படி? இப்படி மாறி விட எப்படி முடிந்தது, அம்மாவால்?'

நினைக்க நினைக்க மலைக்கிறது. பயம், மனசைக் கவ்வுகிறது. அதைவிடக் கொடிய வேதனை, மனச் சூன்யம். நாதியற்றுப் போய் விட்ட உணர்வு. அம்மாவுக்கும் கூட அந்நியமாகி விட்ட திகில்.

''கூறுபோட்டுக் குடும்பம் நாசமாப் போகணுமா? ஒன்னடியும் மண்ணடியுமா எல்லாரும் கூடிக் கிடந்தா... நமக்கு ஒரு பலம்தானே? மாமாவுக்கு அப்புடி என்ன வயசா போச்சு? மிஞ்சிப் போனா... முப்பத்தெட்டு இருக்குமா? அது ஒரு வயசா?''

அடப் பாதகத்தீ! என்ன ஆகிப் போச்சு, உனக்கு? எந்தப் பேய் பிடித்து ஆட்டுகிறது, உன்னை? அதுக்குள்ளாகவா, உன் வாய்ப் பேச்சு இப்படி மாறணும்?

'அரைக் கிழவனுக்கு வந்துருக்கிற ஆசையைப் பாத்தியா' என்று நேற்றுக் கூட புலம்பி அங்கலாய்த்தாயே... ஒரு நாளைக்குள் அரைக் கிழவன் முழு இளவட்டமாகி விட்டாரா?

எந்தப் பேய் பிடித்து அவரை ஆட்டுகிறதோ என்று கலங்கினாயே... அதே பேய், உன்னையும் பிடித்துக் கொண்டதா? அது என்ன பேய்?

நிலத்தோடு நிலம் சேர்க்கிற பேய், அவரைப் பிடித்திருக்கிறது. உன்னை எந்தப் பேய்? பழைய காலப் பேயா? வில் வண்டிப் பேயா? 'பெரும் பண்ணைக் குடும்பமாக' ஆயிடலாம் என்கிற ஆசைப் பேயா? 'மகராசி'யாக - 'பெரிய குடும்பத்து மனுசி'யாக மாறி விடலாம் என்கிற கௌரவப் பேயா?

அதற்கு உன் மகளையா பலிகொடுக்கணும்? உன் 'தங்கப் பெட்டியை'யா காவு கொடுக்கணும்?

உன்னதமானவள் அம்மா. எந்தக் காரணங்களாலும் பங்கப்படாத ஓர் உறவு, அம்மா. மிதித்தால் கூட குஞ்சைக் கொல்லாத ஓர் உன்னத உறவு, அம்மா.

அந்தத் தாய்மையையே நிறம் மாற்றி விட்டதே! குணம் இழக்கச் செய்து விட்டதே! அந்தளவுக்கு கௌரவப் பேய், உனக்குப் பெரிசா?



வயிற்றுப் பாட்டுக்கு அல்லாடி அல்லாடி அலுத்துப் போனாயா? கதியற்றவள் என்ற உணர்வுத் தீயில் வெந்து வெந்து விரக்தியடைந்து விட்டாயா? வெறுத்துப் போனாயா? இனியும் தாங்காது இந்த நிலை என்று ஆகி விட்டாயா?

அதனால்தான்... ஆசை மகளையே பலி கொடுக்கத் துணிந்து விட்டாயா? ச்சே!

எனக்கென்று மிச்சமிருந்தது, நீ ஒருத்தி தான். நீயும் என்னை அம்போவென்று கைவிட்டு விட்டாயா? கழுத்தில் சலங்கை மாட்டி, மாலை போட்டு, மஞ்சள் தண்ணீர் ஊற்றி, பலிபீடத்தின் முன்னால் நிறுத்தி விட்டாயா?

மேலாண்மை பொன்னுச்சாமி

அவளுக்குள் சொல்லி மாளாத கவலை, வருத்தம்.




புரண்டு புரண்டு படுத்தாள். உறக்கமே வரவில்லை. உறக்கம் எப்படி வரும்? மனம் பூராவும் முள் விளாரால் அடிபட்டுக் கிடக்கிற போது, ரத்தக் கசிவு எடுக்கிற போது, உறக்கம் எப்படி அண்டும்?

எழுந்தாள். தொழுவத்திற்குள் வந்தாள். திடீரென்று உள்ளே ஒரு மின்னல். 'செத்துத் தொலைஞ்சுட்டால் என்ன!'

இது ஒரு நல்ல யோசனையாகவே பட்டது. தன்னை முற்றுகைவிட்டவர்கள் அனைவரையும் இதன் மூலம் பழிவாங்கி விடலாமே!

சொர்ணம் தலையை உலுக்கிக் கொண்டாள். அவளது சுபாவம் தலைதூக்கி விட்டது. அவளுக்கே உரிய கர்வம். நா எதுக்குச் சாகணும்? இந்த நாய்களுக்குப் பயந்தா... சாகணும்? யார் இந்த நாய்கள்? யார் இந்த நாராயணசாமி? முக்காக் குறுக்கம் நிலத்தை வைத்துக் கொண்டு நாதியற்றுக் கிடந்த ஒரு அனாதை. அக்காளைக் கல்யாணம் செய்ததன் மூலம் ஒரு மனித அந்தஸ்து பெற்றவர்!

அதுவும் எங்க அய்யா போட்ட பிச்சை! பெருந்தன்மை. இரக்கப்பட்டு போட்ட தானம்! எங்க குடும்பத்தில் பிச்சையெடுத்து மனிதரான ஒரு அற்பப் பதருக்குப் பயந்து கொண்டா... நான் சாவது? அதுவே... ஒரு இழிவல்லவா!

என் கால் தூசிக்குக் கூடப் பெறாத இந்த நாய்களா, எனக்கு எதிரி?

மனசில் ஒரு தெம்பு. ஒரு தைர்யம். ஒரு பலம் கிடைத்து விட்ட மாதிரியான திமிர்வு. உள்ளே வந்தாள்.

படுத்தவள் எதை எதையோ யோசித்தாள். யோசனைகளின் பிடுங்கல்களுக்கு மத்தியில் எப்படியோ உறங்கிப் போனாள்.

விடிந்தது. ஞாயிற்றுக் கிழமை. பர பரக்க வேண்டியதில்லை. வாரிச் சுருட்டிக் கொண்டு எழ வேண்டியதில்லை. ஓடி ஓடிக் காலைக் கடன் முடித்து... சூரியன் உதிப்பதற்குள் பாதித் தூரத்தைக் கடக்க வேண்டியதில்லை.

இந்த ஒருநாள்தான் அவளுக்குச் சொந்தமான நாள். அவள் அவளது விருப்பப்படி உயிர் வாழ்கிற நாள். சூரியோதயத்தைப் பார்க்காமல் தவிர்க்கலாம். யந்திரமில்லை, தான் ஒரு மனுசி என்பதை இன்று உணரலாம். ஒரு விடுதலை உணர்வை - ஒரு சுமையை இறக்கி வைத்த ஆசுவாசத்தை - சுவாசிக்கலாம்.

காலைக் கரண்டு. குழாயில் தண்ணீர் வந்திருக்கும். தொட்டிக்கு நாலு குடமாவது தண்ணீர் எடுத்து ஊற்றலாம். நாலு மனித முகங்களைப் பார்த்தால்... மனசின் இறுக்கம் தளரக்கூடும். மனசுக்குள் புதுக் காற்று பாயட்டும்.

பதறாமல் எழுந்தாள். அம்மா முகத்தில் விழிக்க மனமில்லை. வெறுப்பாக இருந்தது. வெடுக்கென்று திரும்பிக் கொண்டாள். முகத்தைக் கழுவிக் கொண்டாள்.

குடத்தை எடுத்துக் கொண்டாள். எவர் சில்வர் குடம் அழுக்காக இருந்தது. நீர்த் துளி பட்டுப் பட்டு, அதுவே ஒரு கறையாகத் தோன்றியது. மினுக்கிக் கொள்ள வேண்டும்.

குழாயடிக்குத் தெற்கில் ஒரு கட்டைச் சுவர். கட்டைச் சுவருக்குப் பின்னால்... செம்மண் கிடக்கும். அதில் ஒரு பிடி அள்ளிக் கொண்டால், அதை வைத்து குடத்தைத் துலக்கிக் கொள்ளலாம்.

அவள், சுவருக்குப் பின்னாலே மண்ணைக் கையில் அள்ளுகிற போது... குழாயடியில் சொர்ணத்தின் பெயர். சொர்ணம் திகைத்தாள், கூர்மையானாள்.

"ராமானுசம் மகளுக்குக் கல்யாணமாமில்லே?"

"ஆமாமா... ஊர்லேயே பெரிய ராணி கணக்கா திமிரோட திரிஞ்சா. அவளுக்கு அரவமில்லாம கல்யாணம் நடக்கப் போகுது, பூட்டுன வீட்டுக்குள்ளே."

"நாராயணன் முறுக்கான ஊவட்டம். கன்னியறியாத ஊவட்டம். சூட்டு கோட்டு மாட்டுன பெரிய ஆபீஸர்..."

"ஆமா... பெரிய சீமாட்டிங்கிற நெனைப்புலே திமிர்த்தாப்பலேயே அலைஞ்சா. இப்ப, அரைக் கெழவன் காலடியிலே சீரழியப் போறா. துள்ளுன மாடு பொதி சொமக்கத்தானே செய்யும்?"

# தூரத்துச் சொந்தம்

**நடிப்பில் ராஜபூபதி : பாஸ்!**

| | | |
|---|---|---|
| கதை | : | 'பிரிந்தவர் கூடினால்....' சமாசாரம். எனவே, பேச வேண்டாம்! |
| டைரக்ஷன் | : | சர்க்கரை போட்ட சாம்பார் சாதம். |
| வசனம் | : | பப்புள்கம்! |
| இசை | : | புதுமுகம் கவிதாஞ்சன் - தேவலை |

"நெசந்தான். என்னமோ... செவப்புத் தொலியோட பொறந்துட்டாளாம்! அடேயம்மா... அவளுக்கு இருக்குற மண்டைக் கர்வம்! நம்மகிட்டேயெல்லாம் மூஞ்சியைக் குடுத்துப் பேசவே மாட்டா. 'நாமெல்லாம் அவளுக்குத் தூசிக்குச் சமானம், அவா... பெரிய கோபுரம்'ங்கிற நெனைப்பு, மனசுலே."

"அதுக்கெல்லாம் சேத்துத்தான்... 'பீப்' படப்போறாள்லே? அப்பன் பொழப்பை நெனைக்கக்கிட்டே குதிரையேறித் திரிஞ்ச கழுதை... அழுக்குப் பொதி சுமக்காம தப்பிச்சிரவா முடியும்?"

"சீமான் நெனைப்புலே சீராட்டித் திரிஞ்சாலும், சுஞ்சிக்குச் செத்துப் போய், பசை ஒட்டித் திரியுற 'பவுசு' தெரியாதாக்கும்?"

அவளுக்குள் எங்கோ ஒன்று உடைந்து சரிகிறது. காலடித் தரையே உருவிக் கொண்டு ஓடுகிற மாதிரியான திடுக்கிடல். அதிர்ச்சி.

வெலவெலத்துப் போன சொர்ணம், வெடித்துச் சண்டைக்குப் போய் விடலாமா என்று சீறலாய் நினைத்தாள். உஷ்ணமாய் மூச்சு விட்டாள்.

'விழுந்து கிடப்பவளைக் காட்டி, கை கொட்டிச் சிரிக்கிற இதுகளோடு சண்டை போடக் கூடாது. போட்டு நம்ம தரத்தைக் கொறைச்சுக்கிடக் கூடாது...'

அப்படியே திரும்பி விட்டாள். வெறுங் குடத்தை எறிந்து விட்டு குப்புறப்படுத்துக் கொண்ட வேகத்தைப் பார்த்தாள், வேலாயி. அதிர்ச்சியோடு யோசித்தாள்.

"என்னடி... என்னாச்சு?"

"இந்தா! எங்கிட்டேயெல்லாம் பேசாதே! பெத்த புள்ளையை அறுத்துத் திங்குற ஒன்னோட வயித்துலே வந்து

| | |
|---|---|
| சண்டைக் காட்சிகள் | : எலிமெண்ட்ரி ஸ்கூல் ரகம் |
| பிடித்த இடம் | : 'இடைவேளை' கார்டு காட்டும் சீன்! |
| வில்லன் | : பரிதாபத்துக்கு உரியவர் |
| ஹீரோ | : மனோரமா |
| ஹீரோயின் | : மனோரமா |
| மனத்தில் நிற்பவர் | : மனோரமா |
| காமெடியன் | : செந்தில், குமரி முத்து, டிஸ்கோ சாந்தி - தவிரவும், படம் பார்க்கப் போகிற நீங்கள்! |

- ஆர். பி. ஆர்.



பொறந்தேன் பாரு... எனக்கு இதுவும் வேணும், இதுக்கும் மேலேயும் வேணும்.''

எங்கோ வெடித்துச் சீற வேண்டிய கோபம், வேலாயியின் மீது பாய்ந்தது.

அவள் முகம் சட்டென்று கறுத்துப் போய் விட்டது. அவமானத்தில் அப்படியே இறுகிப் போனாள். அடிபட்டு முகம் சிறுத்துப் போன அம்மாவை அவள் பார்க்கவேயில்லை.

அம்மாவா... இவள், பாதகத்தி? ஊர் முழுக்க உதைத்துப் பந்தாடி விளையாடட்டும் என்று என்னைத் தூக்கி வெளியே எறிந்த ரணகாளி! சுயநலக்காரி. அவள் பெருமை கொடி கட்டிப் பறக்கிறதுக்காக, மகளோட நரம்புகளை அறுத்துக் கயிறாக முடிச்சுப் போட்ட கொடுமைக்காரி.

குழாயடிப் பெண்கள் வாயால் எறிந்த சாணம். அவல்துண்டுகள். குழாயடியில் நாலு பெண்களா, இது? இல்லை. மொத்த ஊரின் எண்ணமே இதுதான்!

அடக் கொடுமையே... ஜனங்கள் புத்தி இப்படியா போகணும்? ஒரு பெண்ணை - சம்மதம் கேட்காமல், உயிரோடு சமாதி கட்டப் போகிறார்களே... ஒரு பெண்ணைக் கொடுமைப்படுத்திச் சீரழிக்கப் பார்க்கிறார்களே... என்று எந்தப் பெண்ணுக்கும் ரோஷம் வரவில்லையா? ஆத்திரம் வரவில்லையா? ஆங்காரம் வரவில்லையா? அந்தளவுக்கு ஒரு பெண்ணிடமும் ஈரமேயில்லையா?

பெண்ணின் உரிமை பகிரங்கமாகப் பறிக்கப்படுகிறதே என்கிற சூடு சொரணை ஒருத்திக்குக் கூட வரவில்லையா?

எனது அகம்பாவமும், ஆணவமும், கர்வமும் தெரிகிற அளவுக்கு, பெண்ணினத்தின் உரிமையை சொத்துக்காக ஆணினம் பறிக்கிற அக்கிரமம் தெரியவில்லையா?

இதென்ன காலக் கூத்து?

அட, மானங்கெட்டதுகளே... எனக்கு வரப் போகிற ஆபத்தை நினைச்சா, சந்தோஷப்படுகிறீர்கள்? உங்கள் சந்தோஷம் நிறைவேறப் போறதில்லை. உங்கள் கண்முன்னால் நான் குதிரையாகவே வாழ்ந்து காட்டுகிறேன். சீமாட்டியாகவே இருந்து காட்டுகிறேன். நீங்கள் நெருங்கி நிற்க முடியாத உயரத்தில், ராணியாகவே இருந்து காட்டுகிறேன்.

எனக்கு இருக்கிற அழகுக்குத் தகுதியான.. வாழ்க்கையே வாழ்ந்து காட்டுகிறேன். முடியும். என்னால் முடியும்.

முடியுமா? எப்படி முடியும்? என்ன வழி? யார் துணை?

பழநி ஞாபகத்துக்கு வந்தான்.

அழுகையே வரவில்லை. மனம் முழுக்க ரௌத்ரம். கோபம். காளியின் விஸ்வரூபம்.

எழுந்தாள். டப்பாவைத் திறந்து சில்லறையைப் பொறுக்கினாள். வேகவேகமாக வெளியே போய் விட்டு வந்தாள். ஓர் இன்லெண்ட் லெட்டர்.

அன்றைக்குச் சாயங்காலம். கருகருவென்று மயங்குகிற பொழுது.

வழக்கமில்லாத வழக்கமாக... தெருவில் நடந்தாள். ஊரின் கீழ்க் கோடிக்கு வந்தாள்.

அங்குதான்... பழநியின் தாத்தாவின் குடிசை. முனியசாமிக் கிழவனின் குடிசை.

எதிர்ப்பட்ட நேரமெல்லாம் விசுவாசத்துடன் கையெடுத்துக் கும்பிடுகிற முனியசாமி.

''எங்க ராசாவோட செல்ல மகள் நீங்க. அவுக ஆசைப்பட்டபடி... நீங்க மகாராசியா வாழ்றதைப் பாக்கணும், எங்கண்ணாலே. உங்க கையாலே போடுற சோத்தை நாந் திங்கணும். அப்பத்தான்... ஏங்கட்டை தீயிலே வேகும்'' என்று கபடமில்லாத அசலோடு வாழ்ந்துகிற கிழவன்.

(தொடரும்)

நாதஸ்வரத்தை ஒருவன் உறையி விட்டுக் கொண்டிருந்தான்.

மேளம் வாசித்தவன் தயக்கத்துடன் அப்பா அருகில் வந்தான்.

அப்பா ஜமுக்காளத்தில் சரிந்திருந்தார்.

அம்மா பக்கத்தில் உட்கார்ந்து மெல்ல விசும்பிக் கொண்டிருந்தாள்.

அண்ணாதான் மேளக்காரனை சற்று நகர்த்திக் கொண்டு போனான்.

தூரத்தில் இருக்கும்போதே அண்ணா வின் குரல் வேகமாய்க் கேட்டது.

அண்ணாவுக்குக் கோபம்.

யார் மீதென்று தெரியவில்லை.

இந்து இது யாருக்கோ நிகழ்ந்தது போல வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள்.

அவளுக்கே சற்று ஆச்சர்யமாய்த்தா னிருந்தது.

எப்படி தன்னால் இவ்வளவு விட்டேத்தி யாக இருக்க முடிகிறது?

ஆனால் அப்பா பாவம்தான்.

அவர்தான் இந்தக் கல்யாணத்திற்காக நிரம்பச் சிரமப்பட்டார்.

அண்ணா கொஞ்சம் குஷால் பேர்வழி.

கல்யாணத்துக்குப் பின் வீட்டை முற்றிலு மாகப் புறக்கணித்தான்.

அப்பா இவளுக்கென்று நிறைய வரன்கள் கொண்டு வந்தார்.

ஒன்றும் சரியாக அமையவில்லை.

எல்லாம் பணம்தான்.

அப்பா ஏழை குமாஸ்தா.

இப்படி, அப்படி வாங்கத் தெரியாதவர்.

இந்த மாப்பிள்ளை முடிந்ததில் அப்பா வுக்கு நிரம்ப சந்தோஷம்.

இவளுக்கு ஒன்றும் பெரிதாகச் சந்தோஷ மில்லை.

இவளின் கனவுகள் எல்லாம் கருகி வெகு நாட்களாகி விட்டன.

அப்பா இந்தக் கல்யாணத்திற்காகத் தகுதிக்கு மீறிக் கடன் வாங்கியிருந்தார்.

எல்லாம் வீண்.

இந்தக் கல்யாணம் நின்று போய் விட்டது.

யாரும் எதிர்பார்க்கவில்லை.

ஒரு மணி நேரத்துக்கு முன்பாகக் கூட இந்தக் கல்யாண மண்டபம் குழந்தைகளின் கூச்சலும், பெண்களின் அலைச்சலுமாய்த் தானிருந்தது.

டிபன் சாப்பிட்டுக் கொண்டிருந்த மாப் பிள்ளையின் தந்தை புன்னகை மாறி நெஞ் சைப் பிடித்துக் கொண்டு சரிந்த போதுதான் எல்லாம் மாறி விட்டது.

மண்டபத்தில் கூச்சல் கிளம்பியது.

அப்போதுதான் இந்துவுக்கு கண்மை எழுதிக் கொண்டிருந்தார்கள்.

அம்மாதான் முதலில் ஓடி வந்தாள்.

''போச்சுடி... மாப்பிள்ளையோட அப்பாவுக்கு ஹார்ட் அட்டாக்காம்... ஆஸ் பத்திரிக்கு எல்லாம் போறாங்க...!''

அப்பாவும், அண்ணாவும் ஓடியிருந் தார்கள்.

சரியாக அரை மணி நேரம்.

இருவரும் வந்து விட்டார்கள்.

அப்போது அப்பா ஜமுக்காளத்தில் சரிந் தவர்தான்.

அண்ணாதான் சொன்னான்.

அவர் செத்து விட்டார்.

அம்மா சுவரில் மோதிக் கொண்டு அழு தாள்.

மதுமிதா

''சனியனே... சனியனே...!'' அண்ணா இவளைப் பார்த்துக் கத்தினான்.

இவளுக்குக் கோபம் வரவில்லை.

அழுகையும் வரவில்லை.

பயம்தான் வந்தது.

அதுவும் அப்பாவை நினைத்துத்தான்.

அப்பாவுக்கு நிறைய இழப்பு.

பணக் கஷ்டம் மட்டுமல்ல.

மனக் கஷ்டமும்.

எழுந்து போய் அப்பாவுக்கு ஆறுதல் சொல்ல வேண்டும் போலிருந்தது.

அப்பாவைச் சுற்றிலும் கூட்டம்.

ஆள் ஆளுக்குப் பேசினார்கள்.

இவள் மேல் அநியாயத்துக்கு இரக்கப் பட்டார்கள்.

சமையல் ஆள் வந்து அண்ணாவின் தோள் தொட்டான்.

''சாப்பாடு எல்லாம்...!''

''கொண்டு போய்க் கொட்டு... இந்தக் கல்யாணம் நடக்காது...!'' அண்ணா ஹிஸ்ட ரிக்கலாகக் கத்தினான்.

அண்ணி அவனருகில் போய் அவன் கை களைப் பிடித்துக் கொண்டாள்.

ஓர் ஆறுதலுக்காம்.

இந்துவுக்குச் சிரிப்பு வந்தது.

எல்லாம் நேரம்.

கொஞ்சம் கொஞ்சமாய்க் கூட்டம் கலைய ஆரம்பித்தது.

நெருங்கியவர்கள் மட்டும் மிஞ்சியிருந் தார்கள்.

மாமாதான் அப்பாவைக் கொஞ்சம் காப்பி சாப்பிடச் சொல்லிக் கொண்டிருந்தார்.

அப்பா எழுந்து உட்கார்ந்தார்.

அங்கிருந்தே இவளைப் பார்த்தார்.

தலையிலடித்துக் கொண்டார்.

''போச்சும்மா... எல்லாம் போச்சு...!''

'அப்பா... அழாதீங்க...!'

மனசுக்குள் அப்பாவை சாந்தப்படுத்தினாள்.

'அப்பா... அழாதீங்க...'

கல்யாணம் நின்று விட்டது.

ஆம்.

இதில் நம் பங்கு எதுவுமில்லை.

பணம் நஷ்டம்தான்.

விடு.

இன்னொரு முறை இந்த அவஸ்தை வேண்டாம்.

அண்ணா விடவில்லை.

''என்ன பண்ணப் போறீங்க இப்ப?''

அண்ணா வேகமாய்க் கேட்டான்.

''தெரியலைடா...!''

அப்பாவின் குரல் கம்மியிருந்தது.

''இப்ப சொல்லு... இது தரித்திரம்.. இவ்வளவு செலவு பண்ணாதேன்னு சொன்னேன்... கேட்டீங்களா? இனிமே அவ்வளவுதான்... தாலி கட்டறதுக்கு முன்னாலே அப்பன் போய்ட்டான்...!''

அண்ணா குரூரமாய்ப் பேசினான்.

''டேய்... டேய்... அது பாவம்டா...!''

புலம்பினார்.

அண்ணா மேல் கோபம் வந்தது.

ராஸ்கல்!

பெண் சுகத்துக்காகப் பெற்றவர்களை உதறித் தள்ளிய நாய் அதட்டுகிறது.

அடக்கிக் கொண்டாள்.

மெல்ல எழுந்தாள்.

அப்பாவை நோக்கி நடந்தாள்.

அப்போதுதான் அவன் உள்ளே நுழைந்தான்.

சூர்யா.



''நம்ம குப்புசாமி அண்ணன் கொஞ்ச நாளாவே, 'குழந்தைகள் மேல எனக்கு அலாதி பிரியம்'னு முதல்வருக்குத் தெரிவிக்கக்கறேன்'னு மேடைக்கு மேடை முழங்கிக்கிட்டிருக்காரே, என்ன விஷயம்?''

''தொட்டில் குழந்தைகளைப் பராமரிக்க அரசு, 'தொட்டில் வாரியம்'னு ஒண்ணு ஆரம்பிக்கப் போறதாத் தகவல் வந்துச்சாம்!''

- சீர்காழி வி. ரேவதி



''எதுக்கு மாவாட்டும்போது 'ஹம்மிங்' சவுண்டு கொடுக்கிறீங்க?''

''அப்பத்தானே அடுத்த வீட்டுக்காரங்க மாவை மெஷின் அரைக்கிறதா நினைப்பாங்க!''

- என். முருகேஷ்



''உங்க வீட்ல வெள்ளம் புகுந்ததும் எப்படித் தப்பிச்சீங்க?''

''நான் இருக்கறது அரசாங்கக் குடியிருப்புதானே, வீட்டுச் சுவர்ல பெரிய விரிசல் இருந்துச்சு. அது வழியாத் தப்பிச்சுட்டோம்!''

- எஸ். முகம்மது யூசுப்

சூர்யகுமார்.

மாப்பிள்ளை.

அப்பா சடாரென எழுந்தார்.

பாய்ந்து போய் அவன் விரல்களைப் பற்றிக் கொண்டார்.

மெல்லக் குலுங்கினார்.

இந்து ஆச்சர்யத்துடன் அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

சூர்யா மெல்ல அப்பாவைத் தட்டிக் கொடுத்தான்.

''நடக்கக் கூடாதது நடந்திடுச்சு... தப்பு யார் மீதும் இல்லே... நான் இப்ப போகணும்... வேற வழியில்லே... கல்யாணத்தை நிறுத்தித்தான் ஆகணும்.. ஆனா.. நீங்க கலங்கக் கூடாது... இந்துதான் என் மனைவி... இந்துவுக்கு ஆறுதல் சொல்லுங்க... இன்னொரு நாள் இந்தக் கல்யாணம் நடக்கும்...!''

மெல்ல அப்பா விரல்களைப் பிரித்து, விலகி, தலைகுனிந்தவாறு வாசல் நோக்கி நடந்தான்.

**பம்பாய்க் கடிதம்**

# எலிவேட்டை!

ஓர் எலி உயிரின் விலை என்ன? மூன்று ரூபாய் என நிர்ணயித்திருக்கிறது பம்பாய் முனிசிபல் கார்ப்பரேஷன். பம்பாயில் 85 பேர் எலிகளைக் கொல்வதின் மூலம் மாதம் ரூ. 2,000 சம்பாதிக்கின்றனர். இரவு முழுவதும் வேலை செய்யும் இவர்கள் காலை ஏழு மணிக்குச் செத்த எலிகளுடன் தங்களது அதிகாரிகள் முன் ஆஜர் ஆவார்கள். எலியானது அடிக்கப்பட்டுத்தான் இறந்ததா அல்லது விஷத்தால் செத்ததா என்று கண்டு பிடிக்கப்பட்ட பின்னர் அதற்குத் தகுந்தாற்போல் அவர்களுக்கு வெகுமதி தரப்படும். ஏனெனில் எலிகளை விஷம் வைத்துக் கொல்ல, தனியாக 142 நிரந்தர ஊழியர்கள் உள்ளனர். அதனால் அடித்துக் கொல்லப்பட்ட எலிகளே கணக்கில் ஏற்கப்படும்!

## நெ. 1 இசையமைப்பாளர்கள்



✱ நெ. 1 இசையமைப்பாளர்கள்

அடுத்த ஆறு வாரங்களில் வெளிவர இருக்கும் 14 படங்களுக்கு இசையமைத்துள்ள ஆனந்த் - மிலிந்த், இன்று ஹிந்திப் படவுலகின் நம்பர் ஒன் இசையமைப்பாளர்கள். சகோதரர்களான இவர்களின் தந்தை முன்னாளைய இசையமைப்பாளர் சித்ரகுப்த். இளையராஜாவைக் காப்பியடிப்பதாகக் கூறப்படும் இவர்கள் கூறுவது : "எவ்வளவு பாடல்கள் வேண்டுமானாலும் எங்களால் சுயமாக இசையமைக்க முடியும். ஆனால் தயாரிப்பாளர்கள், இயக்குனர்கள் எங்களிடம் அவர்களைக் கவர்ந்த பாடல் காஸெட்டுகளைக் கொடுத்து, அதே போன்று இசையமைக்கச் சொல்கின்றனர். சமீபகாலமாக நாங்கள் வேறு யாருடைய இசையையும் பின்பற்றப் போவதில்லை என்ற முடிவுக்கு வந்துள்ளோம்."

✱ கெடுபிடி கமிஷனர்

## கெடுபிடிக் கமிஷனர்

சட்டவிரோதமாகக் கட்டப்பட்ட கட்டடங்களை இடிப்பதில் புகழ் பெற்றவர், பம்பாய் நகரத் துணை கமிஷனர் ஜி.ஆர். கைர்னார். சமீபத்தில் வி.டி. ஸ்டேஷன் அருகில் எல்லா நடைபாதைக் கடைகளையும் புல்டோஸர் உதவியால் தரைமட்டமாக்கினார். இப்போது பம்பாயிலேயே நெரிசலான முகமது அலி ரோடில் தம் கைவரிசையைக் காட்டிக் கொண்டிருக்கிறார். பெருமளவில் ஆத்திரமுற்ற கடைக்காரர்கள், சாலையோரம் இருந்த ஒரு மசூதி பாதிக்கப்பட்டதைச் சாக்கிட்டு இவரை மதச் சிக்கலில் மாட்டிவிடப் பார்த்தனர். ஆனால் நேர்மையான இவரை எந்தத் தவறும் செய்யவில்லை என்று விசாரணைக் கமிட்டி கூறிவிட்டது.

## நிமிராத பங்கு மார்க்கெட்

அரசாங்கத்தின் புதிய பொருளாதாரக் கொள்கையைப் பின்பற்றித் தன் பங்குகளையும் பொது மக்களுக்கு விற்ற I.P.C.L., தற்போது தவிக்கிறது. கம்பெனியின் வளர்ச்சி மதிப்பு இவற்றைக் கருத்தில் கொண்டு, 10 ரூபாய் மதிப்புள்ள பங்கு, பொது மக்களுக்கு ரூ. 160 க்கு வழங்கப்பட்டது. பிரீமியம் அதிகம் என்றாலும் மக்களின் ஆதரவு கிடைத்தது. ஆனால் பங்கு மார்க்கெட்டில் முதன் முறையாகப் பட்டியலிடப்பட்ட போது இந்தப் பங்குகளின் விலை ரூ. 140 தான். இதனால் பொது மக்கள் திரம்ப அதிருப்தி அடைந்துள்ளனர். நிறைய பிரீமியம் வைக்கும் பங்குகள் இனி விலை போகாது என்கின்றனர் நிபுணர்கள்! மொத்தத்தில் தீபாவளிக்குப் பிறகு சரியாகும் என எதிர்பார்க்கப்பட்ட பங்கு மார்க்கெட் இன்னும் நிமிரவில்லை!

– அம்ருதா பார்த்தசாரதி

# ஆவலைத் தூண்டும் வற்றல் குழம்பா? உடனே ரெடி!



ஆம்! கோத்ரெஜ் டாமரிண்ட் ப்யூரி இருக்கையில் என்ன கவலை? புளியை நனைத்துக் கரைத்து வடிகட்டி ஏன் அவஸ்தைப்பட வேண்டும்? நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம், எப்போதும்போல் வாணலியில் எண்ணை விட்டு, வற்றல் குழம்பிற்கு வேண்டியவற்றை தாளித்துக் கொண்டு இரண்டு கோப்பை நீர் விட்டு சாம்பார் பொடி, உப்பு முதலியவற்றைப் போட்டு சிறிது கொதிக்கவிடவும். பின்பு தேவையான அளவு டாமரிண்ட் ப்யூரியையும் போட்டு ஒரு கொதி வந்ததும் இறக்கினால் கமகமவென்று மணக்கும் வற்றல் குழம்பு உடனே ரெடி!


புளியோதரை

கோத்ரெஜ் டாமரிண்ட் ப்யூரி என்பது புத்தம்புது புளியிலிருந்து எடுக்கப்பட்ட கெட்டியான சாறு. உபயோகிக்கத் தயார் நிலையிலே வருகிறது. தவிர இதிலே பாதுகாக்கும் பொருட்களோ, செயற்கை நிறங்களோ சேர்க்கப்படவில்லை. அதனால் இது அசல் புளியின் சுவையுடனும், மணத்துடனும் இருக்கும்.

வற்றல் குழம்பைப்போலவே புளிக்காய்ச்சல், மிளகு குழம்பு, புளிப்பச்சடி போன்றவற்றையும் இதைக் கொண்டு மிக விரைவாக சுவைபடத் தயாரிக்கலாம்.


புளிப் பச்சடி

டாமரிண்ட் ப்யூரி அதிநவீன அழகிய டெட்ரா பேக்கிலே வருகிறது. பேக்கைத் திறந்த பின் இதை ஃப்ரிட்ஜில் 6 நாட்களுக்கு வைத்திருக்கலாம்.

இன்னும் ஏன் தாமதம்? இன்றே சென்று சில பேக்குகளை வாங்குங்கள்.

பாதுகாக்கும் பொருட்களோ, செயற்கை நிறங்களோ சேர்க்கப்படவில்லை.
அதனால் பேக்கைத் திறந்தபின் இதை ஃப்ரிட்ஜில் வைத்து
6 நாட்களுக்குள் உபயோகிக்கவும்.







டாமரிண்ட் ப்யூரி.

**புளியின் அசலான சுவை, தொல்லையிலிருந்து விடுதலை.**

தமிழ்நாட்டில் மட்டும் கிடைக்கிறது.

Enterprise/GFL/461 Tm

# புயல்

தமயந்தி

ஓங்கிச் சுழன்று சுழன்று காற்றடித்தது. ரேணுகா ஃபைலை மூடி வைத்து விட்டு எழுந்தாள். மேஜை இழுப்பறையைப் பூட்டி விட்டு ரேடியோவைத் திருகி விட்டாள். 'புயலுடன் கூடிய மழை வேகமாக நகரை நோக்கி நகர்ந்து கொண்டிருக்கிறது.'

காட்! என்ன பண்ணுகிறதோ? க்ரெஷ் மூடியிருப்பார்களோ? ஆயாக்கள் வீட்டுக்குப் போக அவசரப்படுவார்கள்.

ஒருவேளை போக நேரமானால் ப்ரெட் இன்னொரு நேரம் காணுமா? கடவுளே, குழந்தை



பசி தாங்காதே. அவசரமாக ஹேண்ட் பேக்கை தோளில் மாட்டிக் கொண்டு படியில் வேகமாக இறங்கினாள்.

''ஹலோ...''

திரும்பிப் பார்த்தாள் பார்வதி. குடையுடன் ஈரமாய் நின்றிருந்தாள். இவளை அழைக்க கார் வரும். இவளுடன் தொற்றிக் கொள்ளலாமா?

''வீட்டுக்கா பார்வதி? கார் வருமா?''

''ம். வர்றீங்களா?''

''கட்டாயமா. பஸ் ஓடலையாமே, ரேடியோல சொன்னான்.''

''ஸ்வேதா எங்கயிருக்கு?''

''க்ரெஷ்ல. பயமாருக்கு பார்வதி...''

பார்வதி யோசனையாய் ஊடுருவப் பார்த்தாள். புரிகிறது. என்ன நினைக்கிறாள் என்பது புரிகிறது. சுரேஷ் இருந்தால் இந்த வேதனை இருந்திருக்காது என்கிறாள். ஆனால் ஒத்துவரவில்லையே. என்ன புகுந்தது நடுவில்? தெரியவில்லை. ஏதோ ஒரு புயல். இது போல, ஓங்கிக் காற்று அடித்து எந்தக் கிளை எந்த திசையில் ஓடியுமோ என்கிற நிச்சயமற்ற புயல். கிளை மூன்று வருஷத்தில் ஓடிந்து விட்டது. இதனால்தான் அதனால்தான் என்று குறிப்பிட்டுச் சொல்ல முடியாத வானிலை அறிக்கை.

கறுப்பு கோட்டு வக்கீல்கள் நடுவே சுலபமாய் விவாகரத்து வழக்கில் வெற்றி கிடைத்தது. ஒன்றரை வயது ஸ்வேதா. கௌரவமாய் ரேடியோ ஸ்டேஷன் வேலை. ப்ளாட் சொந்தமாய் ஒன்று. போதும்தான். ஆனால் கரண்ட் போனால் பயம் வருகிறது. நடுராத்திரியில் கிளை வீட்டுக் கூரையில் உரசி சப்தமிட்டால் பயம் வருகிறது. புயல் வாழ்க்கையில் வீசியிருக்கக் கூடாதோ என்று தோன்றுகிறது.

புயல். ஈகோ. உடல் மனம் எல்லாம் அழிக்கிற புயல்.

காற்று பலமாய் அடித்தது. ரேணுகா காரில் கண்ணாடியைத் தூக்கி விட்டுக் கொண்டாள். ஸ்வேதா... என்ன பண்ணுகிறாய். தேடுவாள். ''ம்மா...'' என்று அழுவாள். புயல் காற்றுக்குப் பயந்திருப்பாள். பெரிசானதும் அவள் அம்மா வாழ்க்கையில் வீசிய புயல் புரிந்து போகும். அப்போது கேட்பாள். சுற்றம் கதை சொல்லி விடும் அவளுக்கு.

''லவ் பண்ணி கல்யாணம் பண்ணியாமே. பிறகு ஏன் அந்துப் போச்சு?''

என்ன சொல்ல? அவள் பெரிசாவதற்குள் பதிலை யோசிக்க வேண்டும். லவ்தான். அவனும் அப்போது ஆபீசர் கேடர். அடிக்கடி ப்ரோக்ராம் டிஸ்கஷன். சந்திக்க அடிக்கடி சந்தர்ப்பம். சகஜமாய் ஒருநாள் எல்லோரும் கலைய, ''ஒரு நிமிஷம்!'' என்றான். நின்றவுடன் கூட வந்து நின்றான். கண் எதையோ தேட ''ஐ லவ் யூ ரேணு'' என்றான். வயசோ என்னமோ அந்த நிமிஷம் மனசு பறந்தது நிஜம். நிறைய மில்ஸ் அன் பூன் படிக்க, பாரதிராஜா படம் பார்க்கத் தோன்றிற்று.

எல்லாம் கொஞ்ச நாள்தான். கல்யாணமாகிக் கொஞ்ச நாள்தான். லேசாக இற்றுப் போனது, முழுசாய் யாருமற்ற தனி மனுஷியாய்ச் சுழல வேண்டியிருக்கிறது.



இப்போது அவன் பெரிய பதவிக்குப் போய் விட்டான். ஆபீசில் சந்திக்க நேர்ந்தால் ஸ்நேகமற்ற புன்னகைகள். மூன்று வருஷம் கூட இருந்தாயே என்கிற சிறிய தடயம் கூட இல்லாத புன்னகை. உயிரில்லாத செத்த உடல் போல ஜீவனற்ற புன்னகை.

கார் திடீரென்று நின்று போனது. ரேணுகா எட்டிப் பார்த்தாள். பெரிய மரம் இரண்டு துண்டாக ரோட்டின் நடுவில் கிடந்தது. பின்னால் அந்த கார்கிட்டே வந்து நின்றது. இனி என்ன செய்ய? கார் போகாது.

''நான் இறங்கிடுறேன் பார்வதி. ஆட்டோ பார்த்துக்கிறேன்.''

''மழையாருக்கே ரேணு. கொஞ்சம் வெயிட் பண்ணுங்க, எப்படியும் க்ளியர் பண்ணிருவாங்க.''

''வேணாம் பார்வதி. ஸ்வேகா தேடும். எப்படியாக்கும் போணும். தாங்க்யூ.''

மரத்தைத் தாண்டி வந்தாள். கால் செருப்பு பிசுபிசுப்பாயிற்று. எதிர்த்த தெருவில் லாரி மீது லேம்ப் போஸ்ட் விழுந்து கிடந்தது. கடவுளே! க்ரெஷ் கூட முடுக்குதான். பக்கத்தில் நிறைய மரமிருக்கும். ஸ்வேதா... முட்டிக் கொண்டு கண்ணில் நீர் வந்தது. உறவை விட்டிருக்கக் கூடாதோ?

ஸ்கூட்டரில் யாரோ ஒருத்தர் குழந்தையைக் கூட்டிப் போனார். சேர்ந்திருந்தால் இப்படி ஸ்வேதாவும் வந்திருப்பாள். எதற்காகப் பிரிந்தேன்? அற்ப விஷயங்கள் தான். விட்டுக் கொடுத்திருக்கலாமோ? ஸ்வேதா... கடவுளே! மரம் க்ரெஷில் விழுந்திருக்கக் கூடாது.

ஆட்டோ மீட்டருக்கு மேல் இருபத்தைந்து ரூபாய் கேட்டான். வேறு வழியில்லை. மனசில் பயமும் அழுகையும் தொற்றிக் கொள்ள ஏறி உட்கார்ந்தாள். க்ரெஷ் பக்கம் மரம் எதுவும் விழவில்லை. மனசில் நிம்மதி த்வனிக்க உள்ளே போனாள். மேட்ரன் மட்டும் உட்கார்ந்திருந்தாள்.

''ஸ்வேதாவைக் கூப்பிடுங்க.''

''போயாச்சே... யாருமில்லையே.''

''யார் கூட்டிட்டுப் போனா. நான் வந்தாத் தானே விடணும். ஏன் விட்டீங்க?''

''அவ அப்பா வந்திருந்தார் மேடம்.''

இன்றைக்கு என்ன கிழமை? சனிக் கிழமையா? இல்லையே, சனிக் கிழமை தான் க்ரெஷில் இருந்து ஸ்வேதாவை வீட்டுக்கு சுரேஷ் கூட்டிப் போவான். சனி, ஞாயிறு அவனுடன். ஞாயிறு மாலை வீட்டுக்கு வந்து விட்டு விடுவான்.

அவன் வீட்டுக்கு இப்போது கூட்டிப் போயிருப்பானோ? அங்கே எப்படி போக? ரேணுகா - ஈகோவை அழி, அங்கே போ. நன்றி கூறு. பிறகு ஸ்வேதாவைக் கூட்டி வா.

வந்த ஆட்டோவிலேயே வீட்டுக்குப் போனாள். முகம் கழுவி வேறு சேலை மாற்றிக் கொண்டாள். வாசலில் கார் சத்தம் டயர் தேய நின்று, பின் கிளம்பிவேகமாய் விலகிப் போனது. ஸ்வேதா 'ம்மா' என்று கத்திக் கொண்டு நுழைந்தாள்.

''நீ ஏன்மா வரலை? அப்பாதான் வந்தார்.''

''என்ட்ட ஏதும்மா கார்? பார்வதி ஆன்ட்டி கூட வந்தேன்மா. மரம் ரோட்ல விழுந்திடுச்சு. பிறகு ஆட்டோ வச்சு க்ரெஷுக்கு வந்தேனா அங்க நீயில்லை. சரி டிரெஸ் பண்ணிட்டு வந்து கூட்டிக்கலா மேனு நினைச்சேன். டிபன் சாப்பிடுறியா?''

''அப்பா ஸாண்ட்விச் கொடுத்தாரு. போர்ன்விடா குடிச்சேன்ம்மா. அப்பாட்ட புதுசா ஒரு ப்யானோ இருக்கும்மா.''

''ம்.''

சேர்ந்திருந்திருந்தால் இவளால் தின மும் ப்யானோ வாசிக்க முடியும். நான் பண் ணியது தப்போ? மழை என்றதும் கூட்டிக் கொண்டு விட வேண்டும் என்றால் அவ னிடம் இன்னமும் அன்பு இருக்கிறது.

நாளை ஆபீஸில் அவனிடம் நன்றி சொல்ல வேண்டும். என்ன சொல்வான்? ஆச்சர்யமாயிருக்கும் அவனுக்கு.

கண்ணைச் சுகமாய் ஒரு தூக்கம் தழுவிற்று.

**ம**றுநாள் காலையில் மழை வெறித் திருந்தது. லேசாய் ஒரு பூத் தூறல். ஸ்வே தாவை க்ரெஷில் விட்டு விட்டு ஆபீஸ் போனாள். பார்வதி முன்னதாகவே வந்தி ருந்தாள்.

''என்ன பார்வதி... சீக்கிரம் வந்துட் டீங்க?''

''ம்.. ரெக்கார்டிங் இருக்கு. நேத்து எப்படி போனீங்க?''

''ஆட்டோல. கூட கேட்டான்.''

''ஸ்வேதா அழாம இருந்தாளா?''

''அவ அப்பா கூட்டிட்டுப் போய்ட் டார்.''

ஒரு நிமிஷ மௌனம். பார்வதி, ''வரேன்'' என்றாள்.

ரேணுகா நேராக சுரேஷ் அறையைப் பார்த்தாள். ஏதோ பைலை பார்த்துக் கொண் டிருந்தான். சிமெண்ட் கலரில் கோடு போட்ட ஸ்லாக்ஸ். முதல் கல்யாண நாளுக்கு ரேணுகா கொடுத்தது. இன்னும் வைத்திருக்கிறானா? நெஞ்சுக்குள் சில் லென்று ஒரு காற்று வீசிற்று.

கதவை லேசாகத் தட்டினாள். அவன் அனுமதிக்க உள்ளே போனாள். ஆச்சர்ய மாய் சுரேஷ் பார்த்தான். லேசாகக் கீழ் உதடு விரியச் சிரித்தான். என் பின்னாடி அலை கிறாய் பார் என்று நினைக்கிறானோ? அவ்வ ளவு அன்பிருக்கிறவன் நேற்று வீட்டுக்குள் வந்திருக்கலாமே? நீயாகப் போகாதே ரேணுகா. உன் கௌரவம், ஈகோ விட்டுக் கொடுக்காதே. அவன் கீழிறங்கி வரட்டும்.

''என்ன விஷயம்?''

''ரெக்கார்டிங் பில்ஸ்ல கையெழுத்துப் போடணும். எப்ப வரலாம்?''

ரேணுகா நேற்றைய தினத்தை மறந் தாள். மறுபடி மனசுக்குள் ஒரு புயல் வீச ஆரம்பித்தது.

- வேதபுரி எஸ். ரமேஷ்






# சிவகாமியின் சபதம்



## நாற்பத்தேழாம் அத்தியாயம்
## சிறுத்தொண்டர்

பல்லவ வீரர்களில் சிலர் சந்தேகித்தது போல் சேனாதிபதி பரஞ்சோதியின் உடம்புக்கு ஒன்றுமில்லை. அவருடைய தேகம் சௌக்கியமாகத்தான் இருந்தது. ஆனால், அவருடைய மனத்திலேதான் சௌக்கியமும் இல்லை, சாந்தமும் இல்லை.

தம்முடைய கூடாரத்தில் தன்வந்தனியாகப் பரஞ்சோதி உட்கார்ந்திருந்தார். அவருக்குத் தூக்கம் வரவில்லை. அவருடைய மனக்கண் முன்னால் வாதாபியின் வீடுகள் பற்றி எரியும் காட்சியும், ஸ்திரீகளும், குழந்தைகளும், வயோதிகர்களும் அலறிக் கொண்டு ஓடும் தோற்றமும், பல்லவ வீரர்கள் வாதாபியின் எரிகிற வீடுகளிலும் கடைகளிலும் புகுந்து கொள்ளையடிக்கும் காட்சியும், தலை வேறு கை வேறு கால் வேறாகக் கிடந்த உயிரற்ற வீரர்களின் தோற்றமும், இரத்த வெள்ளம் ஓடும் காட்சியும் மாறி மாறி வந்து கொண்டிருந்தன.

இந்தக் கோரமான காட்சிகளோடு, இருளடைந்த பாதாள புத்த விஹாரத்தில் சிவகாமியின் மீது விஷக் கத்தியை எறியப் போன நாகநந்தியின் தோற்றமும், விஷக் கத்தியைக் காட்டிலும் குரூரமான நஞ்சு தோய்ந்த சொல்லம்புகளை அந்தப் பேதைப் பெண் மீது மாமல்லர் பொழிந்த சம்பவமும், கத்தியால் குத்தப்பட்டுத் தரையிலே செத்துக் கிடந்த கண்ணபிரானுடைய களை இழந்த முகமும் இடையிடையே அவர் உள்ளத்தில் தோன்றின.

இவ்வளவுக்கும் மேலாக நெற்றியில் வெண்ணீறும் தேகமெல்லாம் ருத்ராட்ச மாலையும் அணிந்து, கையிலே உழவாரப் படை தரித்துச் சாந்தமும் கருணையும் பொலிந்த திருமுகத்தோடு விளங்கிய திருநாவுக்கரசர் பெருமான், சேனாதிபதி பரஞ்சோதியை அன்புடன் நோக்கி, ''அப்பனே! நீ எங்கே இருக்கிறாய்? என்ன காரியம் செய்கிறாய்? போதும்! வா! உனக்காக எத்தனை நாள் நான் காத்துக் கொண்டிருப்பேன்?'' என்று கேட்டுக் கொண்டேயிருந்தார். அதற்குப் பரஞ்சோதி, ''குருதேவா! இன்னும் அறுபது நாழிகை நேரந்தான்! பிறகு தங்களிடம் வந்து விடுகிறேன்!'' என்று மறுமொழி சொல்லிக் கொண்டிருந்தார்.

சிவகாமி தேவியை விடுதலை செய்து ஆயனரிடம் சேர்ப்பித்து அவர்களை முன்னதாக ஊருக்கு அனுப்பி வைத்த பிறகு, பரஞ்சோதி பொறுக்கி எடுத்த வீரர்கள் அடங்கிய படையுடன் மேற்கு நோக்கிச் சென்றார். வேங்கியிலிருந்து வரும் சளுக்கர் சைனியத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்த ஆதித்த வர்மருடன் சேர்ந்து கொண்டார். வாதாபி தகனம் ஆரம்பமான மூன்று நாளைக்கெல்லாம் வேங்கி சைனியம் வந்து சேர்ந்தது. அந்தச் சைனியம் பெரும்பாலும் யானைப் படையும் குதிரைப் படையும் அடங்கியது. மேற்படி சைனியத்தின் தலைவர்கள் புலி

அமரர் **கல்கி**

கேசியின் மரணத்தையும் வாதாபிக் கோட்டையின் வீழ்ச்சியையும் அறிந்து கொண்டதும் பின்னோக்கித் திரும்பிச் செல்லப் பார்த்தார்கள். பரஞ்சோதியின் முன்யோசனை அதற்கு இடங்கொடுக்கவில்லை. ஆதித்தவர்மரை நின்ற இடத்திலேயே நிற்கவிட்டுப் பரஞ்சோதி விரைந்து வளைந்து சென்று வேங்கி சைனியத்தைப் பின்னோக்கிச் செல்ல முடியாமல் தடுத்தார். இவ்விதம் இரு புறத்திலும் சூழப்பட்ட வேங்கி சைனியம் வேறு வழியின்றிச் சரணாகதி அடைந்தது. அந்தச் சைனியத்தைச் சேர்ந்த பதினாயிரம் யானைகளும் முப்பதினாயிரம் குதிரைகளும் ஒரு சேதமும் இல்லாமல் பல்லவர்களுக்குக் கிடைத்து விட்டன.

இந்த மாபெரும் காணிக்கையை மாமல்லரிடம் ஒப்புவித்ததும் பரஞ்சோதியார் தம்மைச் சேனாதிபதிப் பதவியிலிருந்து



விடுதலை செய்யும்படி கேட்டுக் கொண்டார். இத்தனை காலமும் இராஜ்ய சேவை செய்தாகி விட்டதென்றும், இனிமேல் சிவ பெருமானுக்கு அடிமை பூண்டு சிவனடியார்களுக்குத் தொண்டு செய்து வாழ்க்கை நடத்த விரும்புவதாகவும் தெரிவித்துக் கொண்டார்.

மேற்படி வேண்டுகோள் மாமல்லருக்கு அதிகமான ஆச்சரியத்தை அளிக்க வில்லை. சென்ற சில காலமாகவே பரஞ்சோதியின் மனப்போக்கு மாறி வைராக்கியம் அடைந்து வருவதை மாமல்லர் கவனித்து வந்தார். எனவே அவருடைய வேண்டுகோளை மறுக்காமல் ''சேனாதிபதி! தங்கள் இஷ்டப்படியே ஆகட்டும். ஆனால், எரிந்து அழிந்த வாதாபியின் மத்தியில் நமது சிங்கக் கொடியை ஏற்றும் வைபவத்தை மட்டும் நடத்தி விடுங்கள். அப்புறம் விடை தருகிறேன்'' என்று சொல்லியிருந்தார்.

மேற்படி கொடியேற்று விழா மறுநாள் சூரியோதயத்தில் நடைபெறுவதாயிருந்தது. இதனாலேதான் பரஞ்சோதி, ''இன்னும் ஒரே ஒரு நாள்'' என்று ஜபம் செய்து கொண்டிருந்தார்.

மறுதினம் காலையில் உதித்த சூரிய பகவான் சில நாளைக்கு முன்பு வாதாபி நகரம் இருந்த இடத்தில், - நேற்றெல்லாம் சாம்பலும் கரியும் கும்பல் கும்பலாகக் கிடந்த இடத்தில், - கண்ணைக் கவரும் அதிசயமான காட்சி ஒன்றைக் கண்டார்.

பல்லவ - பாண்டிய சேனா வீரர்கள் வாளும் வேலும் ஏந்தி வரிசை வரிசையாக அணிவகுத்து நின்றார்கள். அவர்களுக்குப் பின்னால் அழகாக அலங்கரிக்கப்பட்ட போர் யானைகளும் புரவிகளும் நிரை நிரையாகக் கண்ணுக்கெட்டிய தூரம் நின்றன. இந்தச் சேனா சமுத்திரத்துக்கு மத்தியில், அலைகடலுக்கு நடுவே தோன்றும் கப்பலின் கூம்பைப் போல் ஒரு புத்தம் புதிய சிற்ப வேலைப் பாடமைந்த ஜயஸ்தம்பம் கம்பீரமாக நின்றது.



லட்சக்கணக்கான வீரர்கள் அவ்விடத்தில் கூடியிருந்த போதிலும், கப்சிப் என்ற நிசப்தம் குடி கொண்டிருந்தது. சிறிது நேரத்துக்கெல்லாம் கூட்டத்தின் ஒரு முனையில் கலகலப்பு உண்டாயிற்று. பேரிகைகள் அதிர்ந்தன! எக்காளங்கள் முழங்கின! சக்கரவர்த்தியின் வருகைக்கு அறிகுறியான மேற்படி வாத்திய கோஷத்தைக் கேட்டதும், அந்த லட்சக்கணக்கான வீரர்களின் கண்டங்களிலிருந்து ஏககாலத்தில் ''வாதாபி கொண்ட மாமல்ல சக்கரவர்த்தி வாழ்க!'' என்ற கோஷம் கிளம்பி மேலே வான மண்டலம் வரை சென்று, நாலா திசையிலும் பரவிப் படர்ந்து எங்கெங்கும் எதிரொலியை உண்டாக்கியது.

சேனாதிபதி பரஞ்சோதி, இலங்கை இளவரசர் மானவன்மர், வேங்கி அரசர் ஆதித்தவர்மன் முதலியவர்கள் பின்தொடர மாமல்ல சக்கரவர்த்தி



* திருச்செங்காட்டாங்குடி கிராமத்து வாதாபி விநாயகர் கோவில்.

ஜயஸ்தம்பத்தின் அடியிலே வந்து நின்றவுடனே, மறுபடியும் ஒரு தடவை ஜயகோஷம் கிளம்பி, எட்டுத் திக்குகளையும் கிடுகிடுக்கச் செய்தது.

சப்தம் அடங்கியதும் மாமல்லர் சுற்றிலும் நின்றவர்களைப் பார்த்துச் சில விஷயங்களைக் கூறினார். தாமும் பரஞ்சோதியும் ஒன்பது வருஷத்துக்கு முன்னால் மாறுவேடம் பூண்டு அவர்கள் இப்போது நிற்கும் அந்த இடத்துக்கு வந்திருந்ததையும், அச்சமயம் அங்கு வேறொரு ஜயஸ்தம்பம் நின்றதையும், அதில் புலிகேசி மகேந்திர பல்லவரை முறியடித்தது பற்றிய பொய்யான விவரம் எழுதியிருந்ததையும், அந்த ஜயஸ்தம்பத்தைப் பெயர்த்தெறிந்து அதன் இடத்தில் பல்லவ ஜயஸ்தம்பத்தை நிலைநாட்டுவதென்று தாமும் சேனாதிபதியும் சபதம் செய்ததையும், அந்தச் சபதம் இன்று நிறைவேறி விட்டதையும் குறிப்பிட்டு, இந்த மாபெரும் வெற்றிக்கெல்லாம் முக்கிய காரண புருஷரான சேனாதிபதி பரஞ்சோதிதான் அந்த ஜயஸ்தம்பத்தில் பல்லவ சைனியத்தின் வெற்றிக் கொடியை ஏற்றுவதற்கு உரிமையுடையவர் என்று கூறி முடித்தார்.

சக்கரவர்த்திக்கும் சேனாதிபதிக்கும் ஏதாவது மன வேற்றுமை ஏற்பட்டிருக்கிறதோ என்பது பற்றிப் பல்லவ வீரர்களிடையில் சந்தேகம் ஏற்பட்டிருந்ததைப் பார்த்தோமல்லவா?

எனவே, இப்போது ஜயஸ்தம்பத்தின் அருகில் சக்கரவர்த்தியும் சேனாதிபதியும் சேர்ந்து நிற்பதைப் பார்த்ததுமே அவ்வீரர்களுக்கு மிகுந்த உற்சாகம் ஏற்பட்டது. சேனாதிபதியைப் பற்றிச் சக்கரவர்த்தி கூறியதை அருகிலே நின்று நன்றாய்க் கேட்டவர்களும் தூரத்திலே நின்று அரைகுறையாகக் கேட்டவர்களுங் கூட அளவற்ற மகிழ்ச்சியடைந்து ஆரவாரம் செய்தார்கள்.

சேனாதிபதி புதிய ஜயஸ்தம்பத்தின் மீது பல்லவ சிம்மக் கொடியை உயர்த்திய போது, சேனா வீரர்களின் குதூகலம் வரம்பு கடந்து பொங்கி ஜயகோஷமாகவும் வாழ்த்துரைகளாகவும் வெளியாயிற்று. பேரிகை முழக்கங்களும், வாத்ய கோஷங்களும், லட்சக்கணக்கான கண்டங்களிலிருந்து கிளம்பிய ஜயத்வனிகளும், அவற்றின் பிரதித்வனிகளுமாகச் சேர்ந்து சிறிது நேரம் காது செவிடுபடச் செய்தன.

சப்தம் அடங்கும் வரையில் பொறுத்திருந்த மாமல்லர் கடைசியாக அன்று அவ்வீரர்களிடம் விடைபெறுவதற்கு முன் வருத்தமான விஷயத்தைத் தாம் தெரிவிக்க வேண்டியிருக்கிறது என்ற பூர்வ பீடிகையுடன் ஆரம்பித்து, இத்தனை காலம் தம்முடன் இருந்து இரவு பகல் சேவை புரிந்து, இந்த மகத்தான வெற்றியைப் பெற்றுக் கொடுத்த பரஞ்சோதியார் இப்போது தம்மிடம் விடுதலை கேட்கிறார் என்றும், அவருடைய உள்ளம் சிவபக்தியில் ஈடுபட்டிருக்கிறதென்றும் சிவனடியாரைச் சேனைத் தலைவராக வைத்திருப்பது பெருங்குற்றமாகுமென்றும், ஆகையால் அவருக்கு விடுதலை கொடுத்து விடத் தாம் சம்மதித்து விட்டதாயும், நாளைக்காலையில் அவர் தம்மையும் பல்லவ சைனியத்தையும் பிரிந்து தனி வழியே தீர்த்த யாத்திரை செல்கிறார் என்றும், வீரர்கள் எல்லாரும் உற்சாகமாக அவருக்கு விடைகொடுத்து அனுப்ப வேண்டும் என்றும் தெரிவித்தார். தாம் தெரிவித்த விஷயம் அவ்வளவாக அந்த வீரர் கூட்டத்தில் உற்சாகம் உண்டுபண்ணவில்லையென்பதையும் கண்டார். எல்லையற்ற மௌனம் அந்தப் பெருங் கூட்டத்தில் அப்போது குடி கொண்டிருந்தது. அடுத்த நிமிஷம், ஆஜானுபாகுவாய் நெடிதுயர்ந்த மாமல்ல சக்கரவர்த்தி தம்மை விடக் குட்டையான சேனாதிபதி பரஞ்சோதியை மார்புறத் தழுவிக் கொண்ட போது, மீண்டும் அந்தச் சேனா சமுத்திரத்தில் கோலாகல த்வனிகள் எழுந்தன.

அன்றைக்கெல்லாம் மாமல்லர் பல்லவ-பாண்டிய வீரர்களுக்கும் படைத் தலைவர்களுக்கும் பரிசுகள் வழங்குவதில் ஈடுபட்டிருந்தார். வாதாபி எரியத் தொடங்கிய நாளிலிருந்து பல்லவ சைனியத்துடன் வந்திருந்த நூறு பொற் கொல்லர்கள் ஆயிரம்

# அருள்வாக்கு



"எல்லோரும் அவரவருக்கு உரிய கர்ம அநுஷ்டானங்களைச் செய்ய வேண்டும்; ஆசாரங்களை அநுசரிக்க வேண்டும்! விபூதி, திருமண், ருத்ராட்சம் போன்ற சின்னங்களைத் தரிக்க வேண்டும்" என்றெல்லாம் நான் திரும்பத் திரும்பச் சொல்லி வருகிறேன். சிலர் இதெல்லாம் எதற்கு என்று நினைக்கிறார்கள். "நல்ல சீலங்களுடன் இருக்க வேண்டியதே முக்கியம். சீலம் மனசைப் பொறுத்த விஷயம். சமய ஆசாரங்களெல்லாம் வெளி விஷயம்தானே?" என்று எண்ணுகிறார்கள்.

மிலிடரிக்காரன் யூனிஃபாரம் போடாவிட்டால் அவனுக்கு வீரம் வராதா என்று கேட்பவர்கள் கேட்கலாம். ஆனால் மிலிடரிக்காரன் என்றால் லோகம் முழுக்க அவனுக்கென்று யூனிஃபாரம் இருக்கத்தான் இருக்கிறது. அதுவே வீரத்தைத் தூண்டுகிறது என்றும் சொல்கிறார்கள்.

வெளியில் தரிக்கும் சின்னம், வெளியில் செய்கிற சம்ஸ்காரம் இவை உள்ளுக்கும் நன்மை தருவனவே ஆகும். வெறும் வேஷம் என்று நினைத்தால் வேஷமாகவே போகும். 'ஆத்மார்த்தமாக, ஜீவனைப் பரிசுத்தம் செய்து கொள்வதற்காக இந்த சம்ஸ்காரத்தைச் செய்கிறேன்; சின்னத்தை அணிகிறேன்' என்று உணர்ந்து செய்தால் சத்தியமாகவே அது உள்ளே புகுந்து சுத்தி செய்கிறது. புறத்தில் செய்வது உள்ளுக்கு உதவுகிறது.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

வீரர்களின் உதவியுடன் தங்கத்தை உருக்கிப் புதிய சிங்க முத்திரை போட்ட பொற்காசுகள் தயாரிப்பதில் ஈடுபட்டிருந்தார்கள். வாதாபி அரண்மனைகளிலிருந்தும் சளுக்க சாம்ராஜ்ய பொக்கிஷங்களிலிருந்தும் கைப்பற்றிய ஏராளமான தங்கக் கட்டிகளையும் பொன்னாபரணங்களையும் பெரிய கொப்பரைகளில் போட்டுப் பிரம்மாண்டமான அடுப்புக்களில் தீ மூட்டி உருக்கினார்கள். உருக்கிய பொன்னை நாணயவார்ப்படத்துக்காக அமைக்கப்பட்ட அச்சுக்களிலே ஊற்றி எடுத்து, லட்சலட்சமாககழஞ்சு நாணயங்களைச் செய்து குவித்துக் கொண்டிருந்தார்கள்.

ஒவ்வொரு பல்லவ - பாண்டிய வீரனுக்கும் அவனவன் தானே சேகரித்துக் கொண்ட செல்வத்தைத் தவிர தலைக்குப் பத்துப் பொற்கழஞ்சுகள் அளிக்கப்பட்டன.

போர் வீரர்களுக்கு மேற்கண்டவாறு பரிசு அளித்த பிறகு படைத் தலைவர்களுக்கும் சிறந்த வீரச் செயல்கள் புரிந்தவர்களுக்கும் விசேஷப் பரிசுகள் அளிக்கப்பட்டன. யானைகளும் குதிரைகளும் சுமக்கக்கூடிய அளவு செல்வங்களும் பகிர்ந்து கொடுக்கப்பட்டன.

துங்கபத்திரைக்கும் கிருஷ்ணை நதிக்கும் அப்பால் பல்லவ ஆதிக்கத்துக்குட்பட்ட விஸ்தாரமான பிரதேசங்களை எல்லாம் வேங்கியைத் தலைநகராக்கிக் கொண்டு சர்வாதிகாரத்துடன் ஆளும்படியாக ஆதித்த வர்மர் நியமிக்கப்பட்டார்.

இலங்கை இளவரசன் மானவன்மருக்குத் தக்க வெகுமதியளிப்பது பற்றி மாமல்லர் யோசித்த போது, "பிரபு! என் தந்தை வீற்றிருந்து அரசாண்ட இலங்கைச் சிம்மாசனந்தான் நான் வேண்டும் பரிசு! வேறு எதுவும் வேண்டாம்!" என்றார் மானவன்மர்.

கடைசியில், மாமல்லர் பரஞ்சோதியைப் பார்த்துச் சொன்னார் : "நண்பரே! இந்த மகத்தான வெற்றி முழுவதும் தங்களுடையது! எனவே, இந்த வெற்றியின் மூலம் கிடைத்த அளவில்லாத செல்வங்களும் உங்களுடையவைதான். முப்பதினாயிரம் யானைகள், அறுபதினாயிரம் குதிரைகள், காஞ்சி அரண்கள், எல்லாம் கொள்ளாத அளவு நவரத்தினங்கள், அளவிட முடியாத தங்கம், வெள்ளி ஆபரணங்கள் இவையெல்லாம் நமக்கு இந்தப் போரிலே லாபமாகக் கிடைத்திருக்கின்றன. இவற்றில் ஒரு பகுதியையாவது தாங்கள் கட்டாயம் எடுத்துக் கொள்ள வேண்டும். ஐயாயிரம் யானைகளும், பதினாயிரம் குதிரைகளும், அவை

கமக்கக்கூடிய செல்வங்களும் தங்களுக்கு அளிப்பதென்று எண்ணியிருக்கிறேன்...''

மாமல்லரை மேலே பேச விடாதபடி தடுத்துப் பரஞ்சோதி கூறினார் : ''பல்லவேந்திரா! மன்னிக்க வேண்டும். தங்களிடம் நான் கோருவது முக்கியமாகத் தங்களுடைய தங்கமான இருதயத்தில் என்றைக்கும் ஒரு சிறு இடந்தான். அதற்கு மேலே நான் கோருகிற பரிசு ஒன்றே ஒன்று இருக்கிறது. அதுவும் வாதாபிக் கோட்டையிலிருந்து கொண்டு வரப்பட்ட பொருளேதான்!''

''ஆகா! அது என்ன அதிசயப் பொருள்?'' என்று மாமல்லர் வியப்புடன் கேட்டார்.

''அந்தப் பொருள் இதோ வரும் மூடு பல்லக்கில் இருக்கிறது!'' என்று பரஞ்சோதி கூறியதும், நாலு வீரர்கள் ஒரு மூடு பல்லக்கைக் கொண்டு வந்து இறக்கினார்கள். பல்லக்கைத் திறந்ததும், அதற்குள்ளே நாம் ஏற்கெனவே பார்த்த விநாயகர் விக்கிரகம் இருந்தது.

வாதாபிக் கோட்டை வாசலில் இருந்த அந்த விக்கிரகத்துக்குத் தாம் பிரார்த்தனை செய்து கொண்டதைப் பற்றிப் பரஞ்சோதி கூறி, அதைத் தம்முடன் கொண்டு போய்த் தாம் பிறந்து வளர்ந்த செங்காட்டாங்குடிக் கிராமத்தில் பிரதிஷ்டை செய்ய விரும்புவதாகவும் தெரிவித்தார். மேற்படி விக்கிரகத்தைத் தவிர வாதாபி நகரத்திலிருந்து கவரப்பட்ட வேறெந்தப் பொருளும் தமக்கு வேண்டியதில்லையென்று பரஞ்சோதி கண்டிப்பாக மறுத்து விட்டார்.

வேறு வழியின்றி மாமல்லர் பரஞ்சோதியின் விருப்பத்துக்கு இணங்க வேண்டியதாயிற்று. பரஞ்சோதி ஸ்தல யாத்திரை செல்லும் போது இரண்டு யானை, பன்னிரண்டு குதிரை, நூறு காலாள் வீரர்கள் ஆகிய பரிவாரங்களை மட்டும் உடன் அழைத்துச் செல்ல வேண்டுமென்று மாமல்லர் பிடிவாதம் பிடித்துத் தமது நண்பரை இணங்கும்படி செய்தார்.

மறுநாள் மத்தியானம் மாமல்லரும் பல்லவ சைனியமும் அவர்கள் வந்த வழியே காஞ்சிக்குத் திரும்பிச் செல்லப் புறப்படுவதாகத் திட்டமாகியிருந்தது. பரஞ்சோதியார் துங்கபத்திரைக் கரையோடு சென்று ஸ்ரீசைலம் முதலிய க்ஷேத்திரங்களைத் தரிசித்து விட்டு வருவதற்காக அன்று காலையிலேயே தமது சிறு பரிவாரத்துடன் புறப்பட்டார்.

புறப்படுவதற்கு முன்னால் மாமல்லரிடம் கடைசியாக விடைபெற்றுக் கொள்ளுவதற்காகச் சக்கரவர்த்தியின் கூடாரத்துக்குப் பரஞ்சோதி வந்த போது பல்லவ - பாண்டிய வீரர்கள் தங்களுடைய கட்டுப்பாட்டையெல்லாம் மறந்து அங்கே கூட்டம் கூடி விட்டார்கள். பரஞ்சோதியின் புதிய தோற்றம் அவர்களைச் சிறிது நேரம் திகைப்படையச் செய்தது. கத்தி, கேடயம், வாள், வேல், தலைப்பாகை, கவசம், அங்கி இவற்றையெல்லாம் களைந்தெறிந்து விட்டுப் பரஞ்சோதி நெற்றியில் வெண்ணீறு தரித்து, தலையிலும், கழுத்திலும் ருத்ராட்சம் அணிந்து, பழுத்த சிவபக்தரின் தோற்றத்தில் விளங்கினார். அவருடைய திருமுகம் நேற்று வரை இல்லாத பொலிவுடன் சுடர் விட்டுப் பிரகாசித்தது. சற்று நேரம் திகைத்து நின்ற வீரர்களைப் பார்த்துப் பரஞ்சோதி கும்பிட்டதும், ''சேனாதிபதி பரஞ்சோதி வாழ்க! வாதாபி கொண்ட மகா வீரர் வாழ்க!'' என்று கூவினார்கள். பரஞ்சோதி அவர்களைக் கை கூப்பி வணங்கி அமைதி உண்டுபண்ணினார். பிறகு, ''நண்பர்களே! இன்று முதல் நான் சேனாதிபதி இல்லை; தளபதியும் இல்லை. சிவனடியார்களுக்குத் திருத்தொண்டு செய்யும் தொண்டர் கூட்டத்தில் அடியேன் ஒரு சிறு தொண்டன்!'' என்று கூறினார்.

அளவில்லாத வியப்புடனும் பக்தியுடனும் இதைக் கேட்டுக் கொண்டு நின்ற பல்லவ வீரர்களில் ஒருவன் அப்போது ஓர் அமர கோஷத்தைக் கிளப்பினான்.

''சிவனடியார் சிறுத்தொண்டர் வாழ்க!'' என்று அவன் கம்பீரமாகக் கோஷித்ததை நூறு நூறு குரல்கள் திருப்பிக் கூவின.

''சிறுத்தொண்டர் வாழ்க!'' ''சிவனடியார் சிறுத்தொண்டர் வாழ்க!'' என்று கோஷம் நாலாபுறத்திலும் பரவி ஆயிரமாயிரம் குரல்களில் ஒலித்து எதிரொலித்தது. பரஞ்சோதியார் தமது சிறிய பரிவாரத்துடனும் வாதாபி விநாயகருடனும் நெடுந்தூரம் சென்று கண்ணுக்கு மறையும் வரையில், ''சிறுத்தொண்டர் வாழ்க!'' என்ற சிரஞ்சீவி கோஷம் அந்தச் சேனா சமுத்திரத்தில் திரும்பத் திரும்ப எழுந்து கொண்டேயிருந்தது!

(தொடரும்)



''வெள்ளத்தைப் பார்வையிடப் போன அமைச்சர் ஏன் கோபமாத் திரும்பிட்டாராம்...?''

''வெள்ளத்தைப் பார்வையிட வரும் 25-வது அமைச்சரே வருக... வருக...!'ன்னு வாசகம் எழுதி வெச்சிருந்தாக் கோபம் வராதா பின்னே...?''

– சீர்காழி வி. ரேவதி



அன்புள்ள அலமு அத்தை,

**G**eo Synchronous Satellite ஸ்பெல்லிங் மனப்பாடம் பண்றத்துக்குள்ள ரொம்ப கஷ்டமாப் போச்சு! ஆனாக்க பிரகாஷ்கிட்டே உன் லெட்டரையும் காமிச்சு விஷயத்தைச் சொன்னப்போ அவனுக்கும் அது புரிஞ்சுது.

நேத்து ரொம்ப ரொம்ப 'ட்ராஜடியா' ஒரு விஷயம் நடந்தது... நான் ஸ்கூல் விட்டு வந்ததும் ஹாலில் ஃபானைப் போட்டேனா... அப்போ ஒரு சிட்டுக் குருவி பறந்து வந்து அதில் அடிபட்டு விழுந்து, செத்தே போயிடுத்து! அந்தக் குருவி, ஹாலில் தொங்க விட்டிருக்கற ராமர் படத்துக்குப் பின்னாடி கூடு கட்டப் பார்த்தது. அது தினமும் வைக்கோலையும் குப்பையையும் கொண்டு வந்து படத்துக்குப் பின்னாடி சொருகும். நான் ஜன்னல் கம்பி மேலே ஏறி, குப்பையை எடுத்துப் போட்டுக் கலைச்சுடுவேன். ஆனாலும் அது விடாம கூடு கட்ட குப்பையோட பறந்து வந்துக்கிட்டே இருக்கும். அப்படி வரச்சே ஃபானில் அடிபட்டுக்குமேன்னுதான் அப்பா கூட்டைக் கலைக்கச் சொல்லுவார். அதைப் புரிஞ்சுக்காம கடைசில ஃபானில் அடிபட்டே செத்தது! அந்தக் குருவிக்குத்தான் மூளையே இல்லை.

எனக்கு ராத்திரியெல்லாம் அந்தச் சிட்டுக் குருவி நினைவாவே இருந்தது. பப்லுவும் நானும் கொல்லைப் பக்கத்தில் குழி பறிச்சு அதைப் புதைச்சு வைச்சோம். அதனோட உடம்பு பட்டு மாதிரி இருந்தது!

இன்னிக்கு ஸ்கூலிலிருந்து வரும் போது சிட்டுக் குருவி நினைவாவே வந்தேன். நான் வந்ததுமே பப்லு என் கையைப் பிடிச்சுத் தோட்டத்துக்கு அழைச்சுக்கிட்டுப் போனாள். அங்கே கும்பலா பதினைஞ்சு சிட்டுக் குருவிங்க - என்ன பண்ணிக்கிட்டிருந்தது தெரியுமா? சரியான புழுதியில உட்கார்ந்து வயித்தால மண்ணைத் தேய்ச்சு, சிறகுகளைப் படபடன்னு அடிச்சுக்கிட்டு தூசியில குளிச்சிக்கிட்டிருந்தது அத்தனை குருவியும்!

பப்லுவுக்கும் எனக்கும் அதைப் பார்த்துச் சிரிப்புத் தாங்கலை. ரொம்ப நேரம் பார்த்துக்கிட்டிருந்தோம். ஆனால் பட்டு மாதிரி இருக்கற சிட்டுக் குருவி ஏன் மண்ணுல புரளணும்னு புரியலை!

எங்களை மட்டும் அம்மா மண்ணுல விளையாடாதேன்னு கோவிச்சுத் தடுத்துடறாளே!

அன்புடன்,

அருண்

Happy New Year!

இது பப்லு எழுதினது



# பேனாவைப் பிரியாத அப்புசாமி!

'தமிழுக்காக உயிர் கொடுப்பேன்' என்று பலர் மார் தட்டிக் கொள்ளும் இக்காலத்தில் 'தமிழுக்காகவே வாழ்வேன்' என்று சொன்ன பெரியவர் பெ.நா. அப்புசாமி. 95 வயது வரை பேனாவைப் பிரியாத அப்பு சாமியாகவே வாழ்ந்தார். வழக்கறிஞர், அறிவியல் நிபுணர், இலக்கியவாதி, மொழி பெயர்ப்பாளர், பகுத்தறிவாளர் என்று பல துறைகளில் முத்திரை பதித்தவர். டிசம்பர் 31 - ம் தேதி அவரது நூறாவது பிறந்தநின விழா. சங்ககால இலக்கியங்களை பெ.நா. அப்புசாமியுடன் இணைந்து படிக்கும் வாய்ப்புப் பெற்ற அவ்வை நடராஜன் அந்த இனிய அனுபவங்களைக் கூறுகிறார் :

சங்ககால இலக்கியங்களைப் படிக்க வேண்டும் என்று எனக்குள் ஓர் வேகம் பிறந்த போது, மர்ரே ராஜம் அவர்கள், அப்புசாமி அவர்களிடம் என்னை அனுப்பினார்.

அப்புசாமியின் இல்லத்துக்குச் சென்று கதவைத் தட்டினேன். பெரியவர் கதவைத் திறந்தார். நெடிய உருவம். நீண்ட கைகள்... அவரது கம்பீரத் தோற்றத்தில் ஒரு சோகம் அப்பிக் கிடந்தது.

என்னுடைய ஆர்வத்தை விளக்கினேன்.

'என்னால் எந்த இலக்கியத்தையும் எவருடனும் படிக்க இயலாது... என்னுயிராய் இணைந்திருந்த மனைவி மறைந்த துக்கத்தில் ஆழ்ந்துப் போய் இருக்கிறேன்... எல்லாமே இருண்டு விட்டது போன்றுள்ளது' என்றார்.

உடனே நான் 'யாங்குப் பெரிதாயினும்' என்று தொடங்கும் ஒரு பாடலைக் கூறி, அண்ணா, மனைவியை இழந்த புறநானூற்று வேந்தன், 'இனி எதற்கு வாழ்வு' என்று பாடியதைப் போன்று கூறுகின்றீர்களே என்றேன்.

உடனே என்னை அவர் கட்டி அணைத்துக் கொண்டு, 'இது மாதிரி யாரும் இலக்கிய மேற்கோள் காட்டியது இல்லை. உன்னுடன் நான் அவசியம் சங்ககால இலக்கியங்களைப் படிக்கிறேன்' என்று கூறி, நூறு நாட்கள் என்னுடன் சங்ககால இலக்கியங்களைப் படித்து அவற்றிலுள்ள ஆழ்ந்த சுவைகளை எனக்குப் புரிய வைத்தார்.

அக்கால கட்டத்தில் எனது ஆங்கிலப் புலமையையும் விருத்தியடைய வழி வகுத்தார் பெரியவர். ''ஒரு தாயைப் போன்று எனக்குப் பல விஷயங்களையும் சொல்லித்தரும் மொழியும் எனக்குத் தாய் மொழிதான்'' என்பார்.

மொழிபெயர்ப்பு இலக்கியத்தில் அவருக்குக் காதல் என்றே கூறலாம். மொழிபெயர்ப்புகள் மூலம் அறிவியல் துறைக்கு அவரைப் போல் தொண்டு செய்தவர்கள் வேறு எவரையும் கூற முடியாது.

மற்றவர்கள் கூறுகிறார்கள் என்பதற்காக எந்த ஒரு விஷயத்தையும் ஏற்றுக் கொண்டுவிட மாட்டார். அறிவியல் பூர்வமாக ஆராய்ந்து உண்மையாக இருந்தால் தான் ஒப்புக் கொள்வார்.

இடது பக்கம் மான் அடிபட்டு விழுந்தால் புலி அதைத் தின்னா என்று இலக்கியத்தில் சொல்லப்பட்ட கூற்றை ஏற்காமல், மிருகக்காட்சி சாலை நிர்வாகத்துக்குக் கடிதம் எழுதி அந்த நம்பிக்கை பொய்யானது என்று நிருபித்தார். அதே போல் பாம்பு பால் குடிக்கும் என்கிற கூற்றைக் கேட்டு வெகுண்டு, பாம்பு பாலும் குடிக்காது, தண்ணீரும் குடிக்காது என்று நிருபித்தவர். என்னுடைய பல மூட நம்பிக்கைகளைப் பொய்யானவை என்று உணரவைத்து என்னை உயர்த்தியவர்.

அவர் எந்த அயல் நாட்டுக்கும் போனதேயில்லை. ஆனாலும் அமெரிக்கா, இங்கிலாந்தின் தெருக்கள் சந்துகள் பற்றி அங்கு வசிப்பவர்களுக்குக் கூடத் தெரிந்திராத அளவுக்கு நுட்பமாகக் கூறுவார். அப்படி ஒரு ஆழ்ந்த படிப்பு.

அவர் எனக்குச் சொல்லிக் கொடுத்தவை எத்தனையோ. ஆரோக்கியம் கருதி நெய்க்குப்பதிலாக நல்லெண்ணெய் ஊற்றிக் கொண்டு சாப்பிடச் சொல்லிக் கொடுத்தார். நானும் என் மனைவியும் வெளியூர் செல்ல வேண்டிய ஒரு சமயம் என் வீட்டுக்கு வந்து மூன்று தினங்கள் தங்கி குழந்தைகளைக் கவனித்துக் கொண்டார். என் மகனுடன் கிரிக்கெட் விளையாடுவார்!

தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர் பதவிக்கு நான் நியமிக்கப்பட்டிருக்கும் இத்தருணம் அந்தப் பண்பாளர் உயிருடன் இருந்திருந்தால் என் தந்தையைக் காட்டிலும் அதிகம் மகிழ்ந்திருப்பார்.

சந்திப்பு : நாயகன்



# 11

சீமந்தத்திற்கு ஒரு வாரம் முன்னால் மாமனாரும், மாமியாரும் வந்து சேர்கிறார்கள். மந்தியில் பத்து நாட்கள் மகள் விஜயலக்ஷ்மிக்கு உடல்நிலை சரியில்லாமல் போன விவரங்களை அவள் பெற்றோர் ஏதோ சினிமா கதை போல் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

''ஆமா, மாப்பிள்ளை எங்கே?''

பனகல் பார்க் அருகே நாடக ஒத்திகை நடக்கிற வெங்கடேசா கல்யாண மண்டபம். ஆஞ்சநேயருக்கு வடை மாலை போல் ஒன்றரை மீட்டர் நீளத்துக்கு ராஜாமணிக்கு பான்பராக் வாங்கிக் கொண்டு லக்ஷ்மிநாராயணன் உள்ளே நுழைகிறான்.

மசால் தோசையும், காப்பியும் வந்ததில் ரிகர்சல் தடைப்பட்டிருக்கிறது. நாடகத்திற்கான முக்கிய பாத்திரங்கள் யார் யார் எனத் தீர்மானமாகி விட்டது. இதற்குள் பரிச்சயமாகி விட்ட நாடகப் பெயர்களில் பரஸ்பரம் அழைத்து விளையாட்டாய் வசனம் பேசி, குழுவினர் தனி உலகத்தில் இருக்கிறார்கள். காப்பிப் பையனிடம் சில்லறை கொடுத்து பில் வாங்கிக் கொண்டு ராஜாமணி திரும்புகிறான். ''வாய்யா ஜேம்ஸ்''. லக்ஷ்மிநாராயணனை வரவேற்கிறான். ஒரு வார்த்தை சொல்லி அனுப்பியிருந்தால் பிரச்னையில்லை. இப்போது பாடையில் படுத்திருக்கிற மாதிரி ஒரு சீன். என்ன? வேண்டாமா? ஒழியட்டும். அரங்க நிர்வாகம், டேப் ரெகார்டர் என்று திரை மறைவு வேலைகள் செய்கிறவனாய் கல்கத்தாவுக்கு அவன் உண்டு. ஆனால் நடிக்கிற வாய்ப்பு பற்றி

உறுதி கூற முடியாது. பரவாயில்லை. ஜாலியாய் போய் வரலாம். அடுத்த வருடம் போட்டியில் ஜமாய்த்து விட்டால் போகிறது.

''மாமா, மாமா....''

ராஜாமணி போகிற இடமெல்லாம் அவன் பின்னாலேயே நகர்ந்தும், அதற்கு மேல் மாமா பிடிகொடுக்கவில்லை. நாடக ஒத்திகை நடந்து கொண்டிருக்கிறது. சோகமான காதுகளில் வசனங்கள் விழுவதில்லை. லக்ஷ்மிநாராயணன். அவனுக்கு மட்டும் ஏன் இப்படியெல்லாம் ஆகிறது? பான்பராக் துப்புவதற்கு ராஜாமணி திரும்புகிறான். ''கவலைப் படாதே. பார்த்துச் செய்யலாம்.'' அன்பாய்த் தோளில் கை வைத்து தைரியத்துக்குச் சொல்கிறான். லக்ஷ்மிநாராயணனுக்கு அழுகையே வந்து விடுகிறது.

திருவள்ளுவர் போக்குவரத்துக் கழக பேருந்து நிலையம். மதுரைக்குப் போகிற தடம் எண் நூற்று சொச்ச வண்டி. நாளை மறுநாள் மதுரையில் சீமந்தம். ஜன்னல் ஓரத்தில் இடம் பிடித்து லக்ஷ்மிநாராயணன், விஜயலக்ஷ்மிக்குக் கொடுக்கிறான். மத்தியில் கை கொடுத்த பாட்டியின் கைப்பிடித்து பஸ் ஏற்றி விடுகிறான். அவன் திரும்புவதற்குள் விஜயலக்ஷ்மியின் அம்மா அவள்

## ம.வே.சிவகுமார்

தலையைச் சுற்றும் தேவி பாரடைஸ்.

பிளாசா தியேட்டரில் ''நடு இரவு'' வெலிங்டனில் ''வாழ்க்கைப் படகு''. அலங்கார் தியேட்டருக்கு அப்போது பெயர் குளோப். பஸ்ஸில் வழிகாட்டி போல் லக்ஷ்மிநாராயணன் சொல்லிக் கொண்டு வர, அவள் மாமனார் அசுவாரஸ்யமாய்த் தலையை ஆட்டி விட்டு, முன்சீட்டில் குனிந்து, ''கூஜா இருக்கிறதா?'' என்று கேட்கிறார். தாவணிப் பெண் லக்ஷ்மிநாராயணனைப் பார்க்கிறாள். ''வர்ரேன், வர்ரேன்'' என்று விஜயலக்ஷ்மி, அவன் பதிலுக்குப் பார்த்ததற்கு விளையாட்டாய் எச்சரிக்கிறாள்.

ஆனந்த் தியேட்டரில் ராஜ ராஜ சோழன். சினிமாஸ்கோப். வேர் ஈகிள்ஸ் டேர். என்டர் தி டிராகன். லிட்டில் ஆனந்தில் தேவ் ஆனந்த் நடித்த கைட், பனாரஸி பாபு. சபையர் தியேட்டரில் கிளியோபாட்ரா, பொலிடன் அட்வென்சர். எமரால்ட் தியேட்டரில் அந்நாஸ். புளு டயமண்டில் சிட்டி சிட்டி பேங் பேங். சைதாப்பேட்டையில் மாமனாருக்குக் கொட்டாவி வருகிறது.

# பாப்கார்ன் கனவுகள்

பக்கத்தில் உட்கார்ந்து விடுகிறாள்.

''ஹாய்'.... சூடிதார் பெண், தாவணியில் சிரிக்கிறாள்.

''ஹலோ சார்''. பெரிய மாமனார் கை குலுக்க, அவர் மனைவி மரியாதைக்குச் சிரித்து மகளுடன் உட்கார்ந்து விடுகிறாள்.

''நான் ஃப்ரண்ட்லே''.... பெரிய மாமனார் டிரைவரை நோக்கி நடக்க, லக்ஷ்மிநாராயணன் பக்கத்தில் பூல மணி நேரப் பயணத் துணையாக அவள் மாமனார் வந்து உட்கார்ந்து கொள்கிறார். எங்கேயோ விசில் சிரிக்கிறது.

மவுண்ட் ரோடு சாந்தி தியேட்டர். நாள் முழுவதும் கியூவில் நின்று வசந்தமாளிகை பார்த்த கல்லூரி நாட்கள். மிலிடரி உடையில் டுப்டுப்பென்று ஆகாயத்தில் படுத்துச் சுடுகிற பிச்சைக்காரன். அவன் தொப்பியில் நிறைகிற சில்லறைக் காசுகள். எப்போதும்

''தூங்கிட்டேளா?''

''இல்லே.''

''இது பரங்கிமலை ஜோதி. இங்க நான் இன்னும் படமே பார்த்தது கிடையாது.''

''அடடே!''

''மெட்ராஸ்லிலே நான் போகாத ஒரே தியேட்டர்.''

''ஓஹோ!''

''பல்லாவரம் தேவி தியேட்டர். பல்லாவரம் லக்ஷ்மியை அடுத்து பாண்ட்ஸ் வாசனை. குரோம்பேட்டை வெற்றி. தாம்பரம் எம்.ஆர். நேஷனலில் சிவந்த மண்'' என்று வென்ற களங்களைப் பட்டியலிட்டுக் கொண்டே லக்ஷ்மிநாராயணன் மாமனாரைப் பார்க்கிறான். தடித்த தத்துவப் புத்தகத்தில் அவர் ஆழ்ந்திருக்கிறார். லக்ஷ்மிநாராயணன் வேறு திசையில் பார்வையைத் திருப்புகிறான். தாவணிப் பெண்ணின்

தாயார் முந்தானையை இழுத்து மூடிக் கொள்கிறாள்.

"வண்டி பத்து நிமிடம் நிற்கும். டிபன் சாப்பிடுகிறவர்கள் சாப்பிடலாம்!" படிக்கட்டில் சொல்லிவிட்டு கண்டக்டர் இறங்கிப் போகிறார். சட்டை பட்டன் அவிழ்த்த டிரைவர், பக்கவாட்டில் குதிக்கிறார். புளியோதரை எண்ணெய் இறங்கிய நியூஸ் பேப்பர் பொட்டலங்கள். விஜயலக்ஷ்மியின் தாயார் எக்கி எடுத்துத் தருகிறாள். ஜன்னலுக்கு வெளியே இலை காலியாய் விழுமென்று வறுமை காத்திருக்கிறது. பெட்டிகளுக்குக் காவலாய்ப் பெண்கள் வண்டியிலிருக்க, ஆண்கள் மூவரும் ஒரு வாய் காப்பி சாப்பிடலாம் என இறங்குகிறார்கள்.

திண்டிவனம் கேண்டீன். இன்னது பேசுவது என்று தெரியாத மௌனம். காப்பி வருகிறது. அதைக் கலக்கிக் கொண்டே பெரிய மாமனார் லக்ஷ்மிநாராயணனைப் பார்க்கிறார்.

"நம்ம மைத்ராவுக்கு நல்ல மாப்பிள்ளை இருந்தாச் சொல்லுங்களேன்."

"உம்...."

கனக்கிற இதயத்துடன் லக்ஷ்மிநாராயணன் பதில் சொல்கிறான். நண்பர்களின் முகங்கள் மனத்தில் வந்து போகின்றன. அவற்றில் பெரிய மாமனாரின் சூடிதார் பெண் மைத்ரேயிக்கு ஏற்றதாக உடன் மனத்திற்குத் தோன்றிய நண்பன் ஒருவனின் பெயரை லக்ஷ்மிநாராயணன் சிபாரிசு செய்கிறான்.

"கிளார்க்கா?"

அடிபட்டது போல் புலி நிமிர்கிறது.

"ஏன்?"

"இல்ல. பெரியவளுக்கு டாக்டர். அடுத்தவளுக்கு இன்ஜினியர். இவளுக்கு கிளார்க்கு வேணாமென்னு பார்த்தேன்."

லக்ஷ்மிநாராயணன் தன் மாமனாரை ஒரு தரம் பார்க்கிறான்.

"சரிதான். இவருக்கு அண்ணனாச்சே. யாரு கிட்டே எப்படி பேசணும்னு பரம்பரைக்கே தெரியாது போல இருக்கு. கிளார்க்னா என்ன கேவலமா? தமிழன் சுய மரியாதை உள்ளவன். யாருக்கும் கை கட்டிப் பதில் சொல்ல முடியாது எனக்கு. அதான் ஆபீசர் ஆகலே. ஆபீசர்னா அப்படியா? மானேஜர் கூப்பிடுவார். பைல் எங்கே? ஸ்டேட்மெண்ட் அனுப்பிச்சாச்சா? எதிர்ல நிக்க வைச்சுக் கேள்வி மேல கேள்வி கேப்பார். தஞ்சாவூர் பொம்மை மாதிரி தலையைத் தலையை ஆட்டணும். அது ஒரு பொழைப்பா? நல்லாக் கேளுங்க. அண்ணன், தம்பி ரெண்டு பேருக்கும் சேர்த்து வைச்சு இதே திண்டிவனம் கேண்டீன்ல சவால் வுடறேன். வாழ்க்கை பூரா நான் கிளார்க்காத்தான் இருப்பேன். ஆனா என் தனிப்பட்ட திறமையிலே பெரிசா ஏதாவது சாதிச்சுக் காட்டுவேன். உங்க ரெண்டு பேர் கண்ணுக்கு முன்னால உங்களை விடப் பெரிய ஆளா நான் ஆகிக் காட்டலே, நான் தமிழனும் இல்லே. என் பேரு லக்ஷ்மி நாராயணனும் இல்லே."

**மை**த்ரேயி தாவணியில் மூச்சிரைத்து ஓடி வருகிறாள். வெளியே மதுரை பஸ் அவர்களுக்காக ஹார்ன் அடித்துக் கொண்டிருக்கிறது. கண்டக்டர் கத்திக் கொண்டிருக்கிறார். "இவ்வளவு நேரம் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? சீக்கிரம்!"

லக்ஷ்மிநாராயணன் காப்பிக்குக் காசு கொடுக்கிறான். பஸ்ஸுக்கு அனைவரும் ஓடுகிறார்கள். கதவு மூடுகிற சப்தத்தில் கண்டக்டரின் கோபம் தெரிகிறது. நெடு நேரம் கழித்து மாமனார் மெதுவே அமைதி கலைக்கிறார்.

"அப்ப ஆபீசர் பரீட்சை இனிமே எழுதப் போறதே இல்லையா?"

"ஆமா, அப்படித்தான்."

மாமனார் முகம் சிவந்து போகிறது.

''கேக்கறேனேன்னு தப்பா நெனைக்காதீங்க. நீங்க டில்லியிலே ஃபைனான்ஸ் மினிஸ்ட்ரிலே சேர்மனா?''

பக்கத்து சீட்டில் பதில் இல்லை.

''செக்ரட்டரியா?''

மௌனம் தொடர்கிறது. கடு கடுத்த மாமனார் முகம் ஜன்னலில் திரும்புகிறது.

''இன்னும் ரெண்டு மாசத்துலே ரிடையர் ஆகப் போற அப்பர் டிவிஷன் க்ளார்க்கு. இல்லியா?''

லக்ஷ்மிநாராயணன் எழுந்து கொள்கிறான். பஸ்ஸுக்குள் நடந்து விஜயலக்ஷ்மியின் காதருகில் குனிகிறான்.

''உங்கம்மாவை அந்த சீட்டுக்குப் போகச் சொல்லு.''

நெடுஞ்சாலையில் ஒளி பாய்ச்சி பஸ் விரைகிறது. விஜயலக்ஷ்மியின் அருகில் லக்ஷ்மிநாராயணன் உட்கார்ந்து கொள்கிறான். வண்டிக்குள் விளக்கணைந்து நீல விளக்கு எரிகிறது. இடப் பெயர்ச்சியில் முடிந்த மாமனார்களின் அத்துமீறல். நியாயமாய் கோபத்தில் மனைவியிடம் இந்நேரம் சிலபல வார்த்தைகள் உதிர்ந்திருக்க வேண்டும். ஆனால் சீமந்தம் முடிந்த இரண்டு நாட்களில் விஜயலக்ஷ்மி புதுடில்லி கிளம்பி விடுவாள். அவள் இல்லாமல் அவ்வளவு பெரிய வில்லிவாக்கம் வீட்டில் லக்ஷ்மிநாராயணன் என்ன செய்யப் போகிறான்? நல்லவிதம் பிரசவம் முடிந்து அவள் திரும்ப வேண்டும். இருட்டில் விஜயலக்ஷ்மியின் மெல்லிய விரல்களை அவன் பற்றிக் கொள்கிறான். அவள் அசதியில் அவன் தோள்களில் சாய்ந்து கொள்கிறாள். ஜன்னல் வழியே குளிர்ந்த காற்று தொட்டுப் போகிறது.

''விஜயலக்ஷ்மி...''

''உம்...''

''தைரியமா இருக்கணும்....''

''உம்!''

''அடிக்கடி லெட்டர் போடணும்.''

''உம்.''

''உங்கப்பா கிட்டே திண்டிவனம் கேண்டீன்ல சவால் விட்டுருக்கேன்.''

இருட்டில் விஜயலக்ஷ்மியின் கண்கள் திறக்கின்றன.

''நான் க்ளார்க்காவே இருக்கப் போறேன். ஆபீசர் பரீட்சை எழுதப் போறதில்லே.''

''உம்.''

''நீ என்ன சொல்றே?''

தோளில் தலையசைத்து விஜயலக்ஷ்மி பதில் சொல்லுகிறாள்.

''க்ளார்க்காவேயிருந்தாலும் பரவாயில்லே. படிச்ச பெரிய ஆபீசர் ஆனாலும் பரவாயில்லே.''

(தொடரும்)

# அயோத்தி ஸ்பெஷல்!



''ஹோட்டல் வாசல்ல என்ன ஒரே போலீஸ் கெடுபிடியா இருக்கு?''

'''இன்றைய ஸ்பெஷல்' - காரா சேவை''ன்னு போடறத்துக்குப் பதிலா 'கர சேவை'ன்னு போட்டுட்டாங்களாம்...!''

● ● ●

அரசியல்வாதி : எங்களை உடனே ஆட்சியில் அமர்த்துங்கள். நாங்கள் கோவிலுக்குள்ளே மசூதியையும், மசூதிக்குள்ளே சர்ச்சையும், சர்ச்சுக்குள்ளே புத்த விஹாரத்தையும், விஹாரத்துக்குள்ளே ஜைன மத பிரார்த்தனை மண்டபத்தையும் கட்டி. வெளியிலே மொத்தமாக பெரிய பூட்டைப் போட்டுப் பூட்டி... எந்த ஒரு வழிபாட்டுத் தலத்தையும் யாரும் இடிக்க முடியாதபடி செய்து, ஸர்வமத அமைதி காப்போம் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

◆ ◆ ◆

காதலி : அயோத்தியிலே மசூதியும் ராமர் கோவிலும் கட்டி முடிச்சப்புறம் தான் கல்யாணம்னு நீங்க சொல்றது கொஞ்சங் கூட நல்லாயில்லே...!



- வீ. சங்கர்

# பாதிப்புகள்



சென்னை திருவள்ளுவர் பஸ் நிலையத்தை இந்தக் கோலத்தில் அடிக்கடி பார்க்க முடியாது. வழக்கமான நெரிசல், டிக்கெட்டுக்கு அலையும் கூட்டமில்லை. பெரும்பாலும் காலியாக இருந்தது.

மாலை ஆறு மணியுடன் முடிந்த 'பந்து'க்குப் பிறகு வெளியில் மெதுவாக ஜனப்புழக்கம் ஆரம்பித்திருந்தாலும் வெளியூர்ப் பயணம் அதிகம் பேர் இல்லைதான்.

நாளை காலை கோயம்புத்தூரில் இருந்தாக வேண்டிய கட்டாயம். ஒரு டெண்டர் ஓப்பனிங்.

''பார்த்துப் போடா, வெட்றாங்க, குத்துறாங்க. இந்த ஒரு நாள் போகாட்டா என்ன? அந்த நெற்றிக் குங்குமத்தை வேற பெரிசா வச்சிண்டு...''

அம்மாவிடம் சமாதானம் சொல்லிவிட்டு வந்தாகி விட்டது. சீட் நெம்பர் இருபத்தி ஐந்து. ஏற்கெனவே ரிசர்வ் பண்ணியிருந்தது இரவு பஸ்ஸாயிருந்ததால் கான்சல் ஆகவில்லை.

பத்து மணிக்குத்தான் பஸ் கிளம்பும் என்றாலும், முன் ஜாக்கிரதையாக ஒன்பதே காலுக்கு வந்தாகி விட்டது. வரும் வழியெல்லாம் இருமல். தொண்டை புண்ணாக இருந்தது. டாக்டரிடம் காட்ட முடியவில்லை.

பாபர் மசூதி இடித்ததன் காரணமாக எழுந்த வன்முறைகளின் பாதிப்பு எங்கள் வீட்டருகேயும் உணரப்பட்டது. நமசிவாயம் என்று ஒரு பேப்பர் போடும் பையன். பெயருக்கு ஏற்றாற்போல் நெற்றியில் எப்பொழுதும் திருநீறு. பந்த்தின் போது நடமாடியதால் இன்று காலை வெட்டப்பட்டு விட்டான். பலி.

எங்கள் வீட்டுக்கும் அவன்தான் பேப்பர் போடுவது. மூன்றாண்டுப் பழக்கம். மசூதி இடித்ததற்கும் இவனுக்கும் என்ன சம்பந்தம்? ஊஹூம். இவன் ஒரு மதத்தைச் சேர்ந்தவன். அவ்வளவுதான். அது போதுமானதாய் இருந்திருக்கிறது.

தந்தையில்லாத குடும்பம். காலேஜில் படித்துக் கொண்டே, பல வேலைகள் செய்து சம்பாதித்துக் குடும்பத்தைக் காப்பாற்றி வந்தான். நேற்று வரை இருந்தவன் இன்று இல்லை.

நான் ஏற வேண்டிய கோயம்புத்தூர் பஸ் வந்து நின்றது. வண்டி கிளம்ப இன்னும் அரை மணி நேரமிருக்கிறது.

ஒரு கப் பால் சாப்பிட்டு விட்டு வரலாமென்று எழுந்து கடை தேடினேன். மாலை செய்தித்தாள்களின் தலைப்புகள் பல்வேறு மாநிலங்களில் சாவு எண்ணிக்கையையும் கலவரங்களையும் சொல்லிக் கொண்டிருந்தன. நமசிவாயம் மீண்டும் நினைவுக்கு வந்தான்.

சைக்கிளில் இருந்தபடியே பேப்பரை உள்ளே விட்டெறியாமல் வாசல் வரைக்கும் நடந்து வந்து வைத்து விட்டுப் போவான். பேப்பர் சரஸ்வதியாம்!

''அய்யோ... அய்யோ... என் செல்லமே, ராசா... இப்படி கிடக்குறியே!

சோம. வள்ளியப்பன்

கண்ணைத் தொறந்து பார்றா... நாங்கள் ளாம் என்னடா தப்புப் பண்ணோம்...'' 'மடார் மடார்' என்று தலையை அவன் கால் மாட்டில் மோதிக் கொண்டு அவன் அம்மா... ஹூம்...

திரும்பி வந்த பொழுது பஸ் கிளம்பத் தயாராக இருந்தது. ஏறி உட்கார்ந்து கொண் டேன். ஜன்னல் ஓரத்து சீட். பக்கத்தில் யார்? காலிதானோ!

இல்லை. இருபத்தாறாம் நம்பர் சீட்டைத் தேடிக் கொண்டு மூன்று இளை ஞர்கள் வந்தார்கள். ஒல்லியாய் கையில் ஒரு ப்ரீப்கேசுடன் இருந்த பையன் அந்த சீட்டில்

"எங்க சார்? கோயம்புத்தூரா? ஈரோடா?'' அவன்தான். மெதுவாய்த் திரும் பிப் பார்த்தேன். மீசை இன்னும் வர வில்லை. கண்ணாடி போட்டுக் கொண்டு சிவப்பாய், ஒல்லியாய் அடுத்த வீட்டு அய்யங்கார் மகன் சீனுவாசன் மாதிரியே!...

''ஆமாம். கோயம்புத்தூர்தான். நீ...?'' 'நீ' என்று கேட்க நினைக்காமலேயே வந்து விட்டது.

''நானும் கோயம்புத்தூர்தான் சார்...''

பஸ் சடன் பிரேக் போட்டு ஒரு சைக் கிள்காரனுக்கு திட்டும் வாழ்வும் கொடுத் தது.



உட்கார்ந்தான்.

''பார்த்துப் போ சையத்... போய் போன் பண்ணு...'' கற்று முற்றும் பார் வையை ஓட விட்டபடி 'உக்கும்' என்று கனைத்தான் இன்னொருவன்.

அவர்களின் சங்கடத்தைப் புரிந்து கொண்டு நானும் பார்வையை சன்னலுக்கு வெளியே ஓட விட்டேன். தொண்டையை இருமல் பிடுங்கியது. செருமிக் கொண் டேன்.

சையதை ஏற்றி விட வந்தவர்களும் அதே இனத்தை சேர்ந்தவர்கள்தான். விடை பெற்றுக் கொண்டார்கள்.

பஸ் கிளம்பியது. கண்டக்டர் டிக்கெட்டுகளை சரிபார்த்துக் கொண் டிருக்க சென்னை போக்குவரத்தில் 'திரு வள்ளுவர்' திணறியபடி நகர்ந்தார்.

இரண்டு பக்கமும் இளைஞர்கள்தான் தீவிரம். இதுவரை சாவு எண்ணிக்கை அறு நூறாம். முந்நூறு முந்நூறா! சீ... இதென்ன கணக்கு? இரண்டு பக்கமும் சரிபாதியாகவா இருக்கும். இதென்ன வெறும் நம்பரா? நபர் கள் அல்லவா? மகன்கள், அண்ணன்கள், அப்பாக்கள். எல்லாம் உயிர்கள். ஹூம்.

''சார் எங்க... பாங்குல ஒர்க் பண்ணு றீங்களா?'' 'ஏது விடாமப் பேசறான்...' ''இல்லை, மெட்ராசில சின்ன பாக்டரி நடத்துறேன்.''

நீ என்ன பண்ணுகிறாய் என்று கேட்க வில்லை. கண்டக்டர் வந்து டிக்கெட் வாங்கி பஞ்ச் பண்ணிக் கொடுத்து விட்டுப் போனார்.

டிசம்பர் குளிர் சில்லென்று வீச... பேசும் பொழுது வாய்க்குள் காற்றுப் போய்... சிரமமாய்... கிச்சென்று கண்ணா டியை இழுத்து மூடினேன்.

''நாளைக்கு ஒரு வேலைக்கு இன்டர் வியூ சார். கம்ப்யூட்டர் புரோகிராமர்

வேலைக்கு. போயே ஆகணும்.'' நான் கேட்கவே இல்லை. இவனாக...

வேண்டுமென்றே தலையைக் குனிந்து கொண்டு கவனிக்காதவன் மாதிரி கீழே எதையோ தேடினேன். 'இவனுடன் என்ன பேச்சு வேண்டியிருக்கு?'

கண்டக்டர் முன்னால் போய் விட்டார். பெரிய விளக்குகள் அணைக்கப்பட்டு நீலக் கலர் டிம் லைட் மட்டும் எரிந்து கொண்டிருந்தது. லாரிகள் ஒன்று விடாமல் ஓவர் டேக் செய்தபடி தன் வேலையே கவனமாய் டிரைவர். எனக்கு தொடர் இருமல்.. 'மற்றவர் தூக்கமும் இந்த பஸ்ஸில் இன்று என்னால் கெடுமோ...'

''பழம் எடுத்துக்குங்க சார்...''

கண்ணை விழித்துப் பார்த்தேன். முகத்தருகே ஒரு பிளாஸ்டிக் பையில் பச்சை முத்துக்களாய்ச் சில்லென்ற 'சீட்லெஸ்' திராட்சை.



''மத ஒற்றுமையை வலியுறுத்தற மாதிரி தலைவர் இன்னைக்குப் பேசினாராமே...?''
''தெரியாதா உங்களுக்கு....? 'பாபர் கோவிலை இடிக்காமல் ராமர் மசூதி கட்டணும்'னு சொன்னார்!''
- சீர்காழி வி. ரேவதி.

நமசிவாயத்தின் உடம்பை மாலைதான் பரிசோதனைக்குப் பின் அறுத்துப் பொட்டலமாய்க் கொடுத்தார்கள். அதைப் பார்த்த கஷ்டத்தில் பால் மட்டும் ஒரு தம்ளர் குடித்து விட்டு வந்தது. இவன் என்னடா வென்றால் ஊசியில் வைத்த திராட்சை..

''இல்லை. தொண்டை கட்டின மாதிரி இருக்கு.'' முகத்தில் அடித்தது போல் சொல்லி விட்டு கண்ணை இறுக மூடிக் கொண்டேன். கஷ்டப்பட்டு நாளைய டெண்டரைப் பற்றி நினைக்க முயன்றேன்.

திடீரென்று விழித்த பொழுது, எல்லா லைட்டுகளும் எரிந்து கொண்டிருந்தன. பஸ் ஸ்டாண்டில் நின்றிருந்தது. சேலமா? ஈரோடா? தெரியவில்லை. பக்கத்தில் சையதையும் காணோம். ஓரிருவர் மட்டும் உலகத்தை மறந்த தூக்கத்தில். மணிஇரவு இரண்டு.

எனக்கு தொண்டைக் கமறல் அதிகமாயிருந்தது வலிக்கவும் செய்தது. மீண்டும் சூடாகப் பால் சாப்பிட்டால் என்ன?

கீழே இறங்கினேன். வாடைக் காற்று வதைத்தது. பாலோ நீச்ச நாற்றம். அதன் சூட்டின் இதத்திற்காகக் குடித்து வைத்தேன். மெதுவாக இடம் தேடி சிறுநீரும் கழித்து விட்டு வந்த பொழுது, டிரைவர் உட்பட அனைவரும் ஏறிக் கிளம்பத் தயாராக. விரு விருவென்று ஏறிப் போய் என் சீட்டில் உட்கார்ந்தேன்.

மீண்டும் இருமல்.

''எல்லாரும் வந்தாச்சா...?'' கண்டக்டர் ஒரு கையால் மேல் கம்பியைப் பிடித்தபடி எட்டி ஒரு நோட்டம் விட்டார்.

''என்ன இவனைக் காணோம். கோயம்புத்தூர் அல்லவா போறதாச் சொன்னான். பெட்டியும் கீழதான் இருக்கு.''

''போலாம்ப்பா... ரைட்.. ரைட்...'' டிரைவர் ஸ்டார்ட் பண்ணினார்.

''ஹலோ... இங்கே ஒருத்தர் வரணும்'' நான்தான் அடங்கிய குரலில்.

''என்னது... வண்டி அரை மணியா நிக்குது. இன்னும் வரணுமா...?'' கோபமாக கண்டக்டர் அருகில் வந்தார்.

''யாருங்க வரணும்?''

''ஒரு பையன்.''

கண்டக்டர் பேசிக் கொண்டிருந்தாரும், சாப்பிட்ட தென்பில் வெற்றிலை பாக்கை மென்றபடி ஸ்டியரிங்கை ஒடித்துத் திருப்பி ஓட்டினார் டிரைவர். பஸ் ஸ்டாண்ட் வாசலுக்கு வண்டி வந்து விட்டது.

''வந்தா... அடுத்த வண்டில கோயம்புத்தூர் வருவாருப்பா அவரு மெதுவா...'' டிரைவர் பேச்சில் கிண்டல்.

வாய் பேசாமல் தூங்கிக் கொண்டும், மென்று கொண்டும் சக பயணிகள். விஷயம் அவ்வளவுதான் என்பது போல கண்டக்டர் முன்னோக்கி நடக்க.....

''லக்கேஜெல்லாம் பஸ்லதான் இருக்கு, வந்திடுவார்'' நான்.

''எல்லாம் டிரான்ஸ்போர்ட் ஆபீஸிலே குடுத்திடுவோம் பத்திரமா.. நாளைக்கு...'' சிரிப்புச் சத்தம்.

'இண்டர்வியூ சர்டிபிகேட்டெல்லாம் இந்த பெட்டிலதானே வைத்திருப்பான்... சே...'

பஸ் ஹைவேஸில் இறங்கியது.

''நிறுத்துங்க.. ஹோல்டான். என்னய்யா இது அநியாயமா இருக்கு? எல்லாரும் பார்த்துக்கிட்டுச் சும்மா இருக்கீங்க...''

நான் போட்ட சத்தத்தில், கேட்ட

சார்மினார் சாலை :

# புத்தருக்கு விடுதலை!



இரண்டு ஆண்டுகளுக்கு மேல் ஹுசைன் சாகர் ஏரிக்குள் ஜலவாசம் செய்து கொண்டிருந்த பிரும்மாண்ட புத்தர், இப்போது ஏரிக்கு நடுவே ஜிப்ரால்டர் பாறையில் கம்பீரமாக நின்று கொண்டிருக்கிறார். சிலை திறப்பு விழா வரும் புத்த பூர்ணிமா அன்று தலாய் லாமா தலைமையில் நடைபெறப் போகிறது. கிட்டத்தட்ட 18 மீட்டர் உயரமுள்ள, ஒரே கல்லில் செதுக்கப்பட்ட சிலையே ஒரு சாதனை எனில், தெப்பம் கவிழ ஏரிக்குள் மூழ்கி விட்ட சிலையை மீட்டு, பாறை மீது நிறுத்தியது மாபெரும் பொறி இயல் சாதனையாகக் கருதப்படுகிறது.

அயோத்யாவின் முதல் எதிரொலி ஹைதராபாத்தின் புராதன சிடியில் தான். ஹைதராபாத்தில் ஊரடங்குச் சட்டம் தளர்த்தப்பட்ட போது ரேஷனுக்கு க்யூ. வயிற்றுப்பாடு என வரும்போது, மதம் என்ன செய்யும்!



"ஏன் இப்போதெல்லாம் தாங்கள் காவி உடை அணிவதில்லை?" - தேசிய முன்னணித் தலைவர் என்.டி.ஆரிடம் ஒரு நிருபர்.

"அந்தக் காஸ்டியூம் போட்டால் 'வகுப்புவாதி' என முத்திரை குத்தி விடுவார்கள்!" - புன்னகைத்துக் கொண்டே நடிகர் ராமராவ்.

– சுபஸ்ரீ

கேள்விகளால் மற்றவர்களும் சேர்ந்து கொள்ள எரிச்சலாய் பஸ் நிறுத்தப்பட்டது. நான் ஒரு தொந்தரவாகத் தெரிந்தேன்.

நான் தர்மசங்கடத்தில். இவன் எங்கே போய் விட்டான்? வருவானா, மாட்டானா? இவர்கள் எவ்வளவு நேரம் காத்திருப்பார்கள்?

நான் பஸ்ஸை விட்டுக் கீழே இறங்கி நின்றேன். இருப்புக் கொள்ளவில்லை. உடன் கண்டக்டர் நச்சரித்தபடி. பெட்டியோடு என்னையும் இறக்கி விட வேண்டுமென்று ஒருவர் சொல்லுவது எனக்கும் கேட்டது. நல்ல 'மனிதர்'கள்.

அதோ... அதோ அவனேதான். ஓடி வந்தான். முன் ஓடிச் சென்று, கையை ஆட்டி அடையாளம் காட்டினேன்.

மூச்சிரைக்க ஓடி வந்தவனை அன்பாய் உள்ளே அழைத்துப் போனேன்.

''எங்கப்பா போன...'', ''நாங்கள்ளாம் காலாகாலத்தில் ஊர் போய்ச் சேர வேணாமா...?'' ''இப்படி வர்றவனுவ தனியா டாக்ஸில வரணும்...'' பேச்சுக்கள் காதில் ஏறவில்லை.

நிம்மதிப் பெருமூச்சுடன் எங்கள் சீட்டுகளில் உட்கார்ந்தோம். விளக்குகள் அணைக்கப்பட்டன. வண்டி வேகம் பிடித்தது.

'நாம மட்டும் இல்லைன்னா...' என்று அலையத் துவங்கிய மனதை அடக்கினேன். 'பாவம் நாளை இண்டர்வியூ என்றானே. நல்லவேளை...'

''எங்கப்பா போய்ட்ட இவ்வளவு நேரம்?'' கமறிய தொண்டையை அடக்கியபடி கேட்டேன்.

''இந்தாங்க. இதை முதல்ல வாயில போட்டுச் சப்புங்க... சொல்றேன்...''

ஒரு பட்டை 'விக்ஸ்' மாத்திரையும், கூடவே ஸ்டிரெப்சில்ஸ் மாத்திரைகளும் - தொண்டை கமறல் அடங்க.

''ஏதுப்பா... இந்த ராத்திரில...?''

''இதைத் தேடித் தேடித்தான் இவ்வளவு நேரமாயிடுச்சு. விடாம இருமிக்கிட்டே இருந்தீங்களா.. மருந்துக் கடையைத் தேடித் தேடி...''

எனக்குத் தொண்டை அடைத்தது. சையதின் கைகளை கெட்டியாகப் பிடித்துக் கொண்டேன். அவனும் மலங்க மலங்க விழித்தபடி என் கைகளைப் பற்றிக் கொண்டான்.

பஸ் அமைதியாக, சீரான வேகத்தில் போய்க் கொண்டிருந்தது.

# சக்கரவர்த்தித்




## 15. சீதா கலியாணம்

**மி**திலையில் ஜனக மகாராஜனுடைய யாகத்துக்காகச் சகல ஏற்பாடுகளும் செய்யப்பட்டு, பல வேறு தேசங்களிலிருந்து ரிஷிகளும் பிராமண சிரேஷ்டர்களும் வந்து சேர்ந்திருந்தார்கள். விசுவாமித்திரருக்கும் ராஜ குமாரர்களுக்கும் தகுந்த விடுதி காட்டப்பட்டு, அங்கே அவர்கள் தங்கினார்கள். ஜனகருடைய புரோகிதரான சதானந்தர் விசுவாமித்திர முனிவரை எதிர்கொண்டு உபசரித்தார். பிறகு ஜனகரே நேரில் வந்தார்.

"**தா**ங்கள் என்னுடைய யாகத்திற்கு வந்தது என்னுடைய பெரும் பாக்கியம்'' என்றார் ஜனகர்.

''இந்த வாலிபர்கள் யார்? இவர்களைப் பார்த்தால் தேவலோகவாசிகளைப் போலிருக்கிறார்கள். ஆயுதங்களைத் தரிக்கும் தோரணையைப் பார்த்தால் தேர்ச்சியடைந்த வீரர்களாகக் காணப்படுகிறார்கள். இவர்கள் இருவரும் ஒரே சாயலாகவும் இருக்கிறார்கள். இவர்களைப் பெற்ற மகா பாக்கியவான் யார்?'' என்று ஜனகர் கேட்டார்.

விசுவாமித்திர முனிவர், அவர்கள் தசரத சக்கரவர்த்தியின் குமாரர்கள் என்பதையும், தாம் செய்த யாகத்தை அவர்கள் காத்து, அரக்கர்களை அழித்த விவரத்தையும் ஜனக மகா ராஜனுக்குத் தெரிவித்தார்.

விருத்தாந்தம் எல்லாம் சொல்லி, ''மிதிலையிலுள்ள ருத்திர தனுசைப் பற்றிக் கேள்விப்பட்டு, தாங்கள் அனுமதித்தால் அதைப் பார்க்க வந்திருக்கிறார்கள்'' என்று பொருளை அடக்கி முனிவர் சொன்னதும் ஜனகர் அளவில்லாத மகிழ்ச்சி அடைந்தார்.

"**வி**ல்லைப் பார்க்க வந்திருக்கிற ராஜகுமாரன் வில்லைப் பார்க்கலாம்; வில்லை வளைத்து நாண் ஏற்றினானாகில் என் மகளையும் பெறுவான்.

# திருமகன்

இந்த வில்லைப் பார்த்து, அசைக்கவும் முடியாதென்று திரும்பிப் போன ராஜ குலத்தவர்கள் பலர். சரீர சம்பந்த மின்றித் தெய்வீகமாய்த் தோன்றிய என் மகள் சீதையைத் தசரதருடைய மகன் பெற்றானாகில் நான் மகிழ்வேன்'' என்றார் ஜனகர்.

வில்லைக் கொண்டு வரும்படியாக ஜனகர் தம் ஆட்களுக்கு உத்தரவிட்டார்.

வில்லானது ஓர் இரும்புப் பெட்டியில் பூஜை பந்தோபஸ்துடன் வைக்கப் பட்டிருந்ததை எட்டு சக்கரங்கள் கொண்ட வண்டியில் ஏற்றி, ஆயிரக் கணக்கான ஜனங்கள் சேர்ந்து உற்சவத் தேரை இழுத்து வருவதுபோல் இழுத்து வந்து சபா மண்டபத்தில் சேர்த்தார்கள்.

"இதோ, நானும் என் முன்னோரும் பூஜித்த மகா தேவருடைய வில். ராஜ குமாரி சீதையை அடைய இதைப் பல அரசர்கள் வளைத்து நாண் ஏற்றப் பார்த்து முடியாமல் திரும்பிப் போயினர். இதைக் காண விரும்பும் தசரத குமாரனும் பார்க்கலாம்'' என்றார் ஜனகர்.

சபையில் இவ்வாறு ஜனகர் சொன்னதும், ''ராமசந்திரனே! பெட்டியைத் திறந்து, வில்லைப் பார்'' என்றார் விசுவாமித்திர முனிவர்.

குருவின் ஆணையைப் பெற்ற ராமன் இரும்புப் பெட்டியைத் திறந்து வில்லைப் பார்த்து விட்டு மிக வினயமாக, ''இந்தப் புண்ணிய தனுசை நான் தீண்டலாமா? எடுத்து நாண் ஏற்ற அனுமதி உண்டா?'' என்றான்.

ஜனகரும் விசுவாமித்திர முனிவரும் ''மங்களம் ஆகுக!'' என்றார்கள்.

சபையிலிருந்த அனைவரும் கண்களை மூடாமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

ஒரு பூமாலையை எடுப்பது போல் அவ்வில்லை விளையாட்டாக எடுத் தான் ராமன்!

"சீதை எனும் பூந்
தொடவர் கொம்பினைச்
சூட்டிட நீட்டும்
ஏடவிழ் மாலை
இதென்ன
எடுத்தான்!''

**ராஜாஜி**



எடுத்து நிறுத்தித் தன் கால் கட்டை விரலால் தாக்குக் கொடுத்து, வில்லை வளைத்து நாண் ஏற்றி விட்டான். பிறகு நாணைப் பிடித்துக் காது வரையில் இழுத்தான்.

**தடுத்(து) இமை யாமல்**
**இருந்தவர் தாலில்**
**மடுத்ததும் நாண் நுதி**
**வைத்ததும் நோக்கார்**
**கடுப்பினை யாரும்**
**அறிந்திலர் கையால்**
**எடுத்தது கண்டனர்**
**இற்றது கேட்டார்!**

*(கடுப்பு - வேகம்)*

நாணை இழுத்த வேகத்தில் வில் வளைந்து வளைந்து திடீர் என்று இடி யோசையுடன் முறிந்தது. தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள்.

“என் உயிரை விடப் பிரியமான சீதையை ராமனுக்குத் தந்தேன்'' என்றார் ஜனகர்.

''மிக வேகமாகச் செல்லும் தூதர்களை அயோத்தியைக்கு அனுப்பித் தசரத மகாராஜனை அழைத்து வர உத்தரவு இடுவீராக'' என்றார் விசுவாமித்திர முனிவர்.

அப்படியே தூதர்கள் சென்றார்கள்.

ஜனக மகாராஜனுடைய தூதர்கள் மூன்று நாட்கள் வெகு வேகமாகப் பிரயாணம் செய்து, அயோத்தியைப் போய்ச் சேர்ந்தார்கள். தேவராஜனைப் போல் சிம்மாசனத்தில் அமர்ந்திருந்த தசரத சக்கரவர்த்தியைக் கண்டு தூதர்கள், ''விசுவாமித்திர முனிவரும், ஜனக மகாராஜாவும் தங்களுக்கு நற்செய்தி அனுப்பியிருக்கிறார்கள். திருமகன் மிதிலைக்கு வந்தவன் சீதா சுயம்வரத்துக்கு அமைக்கப்பட்டிருந்த பரமசிவனார் வில்லை வளைத்து, நாணேற்றி, நாணை இழுத்து வில்லை ஒடித்தே விட்டான். சீதையைத் தங்கள் வீர குமாரன் ராமசந்திரனுக்குக் கொடுத்து விவாகம் செய்யத் தங்கள் அனுமதியையும் தங்கள் நல்வரவையும் ஜனக மகாராஜா எதிர் பார்க்கிறார். அனைவரும் உள்ளம் பூரித்து மகிழுமாறு தாங்களும் பரிவாரமும் உடனே மிதிலை செல்ல வேண்டும்'' என்று கூறினார்கள்.

---

**ப**யந்து பயந்து ராஜ குமாரர்களை விசுவாமித்திர முனிவருடன் அனுப்பின தசரதனுக்கு இந்த விதமான சந்தோஷச் செய்தி வந்ததும் அவன் பரவசப்பட்டான் என்று சொல்லவும் வேண்டுமா? உடனே மந்திரிகளுக்குச் சொல்லி எல்லா ஏற்பாடுகளும் செய்து, அடுத்த நாளே தசரதன் பரிவாரத்துடன் மிதிலைக்குப் புறப்பட்டான்.

**த**சரதன் சகல பரிவாரங்களுடனும் அரசர்க்குரிய ரத்தினாதி பரிசுகளுடனும் மிதிலை போய்ச் சேர்ந்தான். ஜனகரும் தசரத சக்கரவர்த்தியும் சந்தித்து உபசாரங்கள் முடிந்ததும், ''யாகம் சீக்கிரத்தில் முடியும். அது முடிந்தவுடனே இந்த விவாகத்தை நடத்தி விடுவது சிலாக்கியமாக எண்ணுகிறேன்'' என்று ஜனக மகாராஜா தசரதனுக்குச் சொல்லிச் சம்மதியைக் கேட்டார்.

''பெண்ணைக் கொடுப்பவராகிய நீர் அல்லவோ செய்ய வேண்டியதற்கெல்லாம் அதிகாரி? நீர் சொல்லுகிற படி எல்லாம் நடக்க வேண்டியது'' என்றான் தசரதன்.

"**இ**தோ என் மகள் சீதை, மகனே! நீ செல்லும் தரும நெறியில் இவள் உன்னுடன் துணையாகச் செல்வாள். கையைப் பிடித்துப் பெற்றுக் கொள்வாய். மங்களம் ஆகுக. கற்பைக் காத்து மிக பாக்கியவதியாக உன் நிழலைப் போல் உன்னைப் பற்றி நிற்பாள். எப்போதும் விட்டுப் பிரிய மாட்டாள்.''

**இயம்ஸீதா மம ஸுதா**
**ஸஹ தர்ம சரீ தவ**
**ப்ரதீச்ச சைனாம் பத்ரம்தே**
**பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணிநா**
**பதிவ்ரதா மஹா பாகா**
**சாயா இவானுகதா ஸதா**

வடநாட்டில் எல்லா விவாகங்களிலும் பெண்ணைக் கொடுக்கும் போது இந்த சீதா கல்யாண மந்திரத்தைச் சொல்லி வருகிறார்கள்.

**இ**வ்வாறு ஜனகர் சீதையை ராமனிடம் ஒப்புவித்து விட்டார். சீதையும் சக்கரவர்த்தித் திருமகனும் பழைய பாற்கடல் காதலர்கள் அல்லவோ? பிரிந்தவர்கள் மறுபடியும் ஒன்று கூடும் பெரு மகிழ்ச்சியை அடைந்தார்கள்.

(தொடரும்)



• ராஜினாமா கோரிக்கை

• பிள்ளையைக் கிள்ளி...

• சக்கைப் போடு!

● வேங்கடேசன், சிதம்பரம்.

*? பிள்ளையையும் கிள்ளி விட்டுத் தொட்டிலையும் ஆட்டுகிறாற் போல் முதல்வர் செயல்படுகிறாரே?*

! அப்படியா? தொட்டிலையும் ஆட்டி விட்டுப் பிள்ளையையும் போட வைக்கிறார் என்றல்லவா நினைத்திருந்தேன்!

● கு. ஆனந்தன், ஈரோடு.

*? லஞ்சம் வாங்குவதை சட்டப்படி அனுமதித்து இதற்கு இவ்வளவு என்று நிர்ணயித்து விட்டால் என்ன?*

! அப்புறம் மட்டுமென்ன, மேலே போட்டுக் கொடுங்க கோரிக்கைதான் எழப் போகிறது!

● தென்றல் கார்த்தி, நாட்டரசன்கோட்டை.

*? 'பிரதமர் பதவியின் கண்ணியத்தைக் காக்க பிரதமர் ராஜினாமா செய்ய வேண்டும்' என்று சந்திரசேகர் கூறுகிறாரே?*

! அவர் மட்டுமல்ல; வேறு பலரும் கூட நரசிம்மராவ் ராஜினாமாவைக் கோருகிறார்கள். அவர் கல்யாண் சிங் அரசை டிஸ்மிஸ் செய்து, ராணுவத்தை நிறுத்தி, ''கர சேவை''யைத் தடைசெய்திருந்தால், அதெல்லாம் 'ஜனநாயகப் படுகொலைகள்' என்று சொல்லி, அப்போதும் பிரதமரின் ராஜினாமாவைத்தான் கோரியிருக்கப் போகிறார்கள். அல்லது மத்திய ஆட்சியையே கவிழ்த்திருக்கப் போகிறார்கள். இப்போதாவது பி.ஜே.பி. வகையறா மீது பழி சுமத்தப்பட, நரசிம்மராவ் ஆட்சி நம்பிக்கை இல்லாத் தீர்மானத்தை முறியடித்து 228 வோட்டுக்கள் வித்தியாசத்தில் நிலைத்திருக்கிறது. எனவே இரண்டு ஆபத்துக்களில் குறைந்த ஆபத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறார். அந்தத் தேர்வு ஜனநாயக மரபுக்கு இசைவாகவும் இருந்திருக்கிறது. ஜனநாயகத்தில் நம்பிக்கைகளின் அடிப்படையில்தான் பல சந்தர்ப்பங்களில் நடந்து கொள்ள வேண்டியிருக்கும். நம்பிக்கைத் துரோகத்துக்கு யார் என்ன செய்ய முடியும்? நரசிம்மராவ் பதவியைக் காப்பாற்றிக் கொள்ள இப்படி செய்தார் என்பதை விட ஆட்சியைக் காக்கும் விதத்தில் நடந்து கொண்டார் எனலாம். இன்னொரு தேர்தலை அதற்குள் சந்திக்கவும் நாடு தயாராக இல்லை.

● எஸ். நாரம்புநாதன், அரக்கோணம்.

*? அரசியல்வாதிகள், மதவாதிகள் - யாரால் நாட்டுக்கு ஆபத்து அதிகம்?*

! இரண்டையும் கலந்து வியாபாரம் பண்ணும் குழப்பவாதிகளால்தான்.

● சித்ரா, கும்பகோணம்.

*? இளவரசர் சார்ல்ஸ் - டயானா பிரிந்து வாழ முடிவு செய்திருப்பது பற்றித் தராசின் கருத்து என்ன?*

! டைவோர்ஸ் செய்து கொண்டால் சிம்மாசனம் போய் விடும் என்பதால் பிரிந்து வாழ முடிவு செய்துள்ளனர். இதை நோக்க, காதலுக்காக சிம்மாசனத்தைத் துறந்த எட்டாவது எட்வர்ட் நம் மதிப்பில் உயர்கிறார்.

● எஸ். நாகராஜன், மேலப்பாதி.

*? 'இந்தியா கிரிக்கெட்டில் தோல்வி அடைவதற்குக் காரணம் அரசியல் தலையீட்டால் ஆட்கள் சேர்க்கப்படுவதுதான்' என்று பேசப்படுகிறதே?*

! டீம் ஸெலக்ஷனில் அரசியல் அவ்வப்போது புகுந்தாலும் அது மட்டும் காரணம் என்று கூற முடியாது. தற்போது தென் ஆப்ரிக்காவுக்கு அனுப்பப்பட்ட குழு சரியான தேர்வு என்றே கருதப்பட்டது. ஆனால் உயிரைக் கொடுத்தேனும் வெற்றிக்குப் பாடுபட வேண்டும் என்ற உணர்வு நம் ஆட்டக்காரர்களிடம் இல்லை. இதை நேரில் காண்பதை விட டீவியில் இன்னும் நிதர்சனமாகப் பார்க்க முடிகிறது. தென் ஆப்பிரிக்கக் குழுவினர் எப்படி பவுண்டரிகளை விழுந்து விழுந்து தடுக்கிறார்கள்; எப்படி நின்று நிலைத்து கறுகறுப்பாய்

## சார்ல்ஸ்–டயானா: பிரிந்துவாழ முடிவு செய்தது பற்றி?



• பிரிந்து...



• ...வாழ



* பாராட்டு...



* ...பெறுகிறார்கள்

ஆடுகிறார்கள் என்பதையெல்லாம் கவனித்தால் வித்தியாசம் புரியும்.

● எம். இராஜேந்திரன், லால்குடி.

*? கிரிக்கெட் விளையாட்டில் பௌலர்கள் விருப்பப்படி, கேப்டனாக இருந்தாலும் தான் நிற்க வேண்டிய இடத்தை அஸாருத்தீன் கேட்டது பெருந்தன்மையே தவிர, குறை கூறும்படி இல்லையே?*

! பௌலர் மாறும் போது ஒரு நிமிஷம் காப்டனும் பௌலரும் கலந்து பேசி ஃபீல்டர்களை நிறுத்துவதுதான் வழக்கம். தான் எங்கே நிற்க வேண்டும் என்று காப்டனுக்கே தெரியாத நிலை வரவேற்கத்தக்கது அல்ல.

● எஸ். பி. ஓய். ராமன், சென்னை - 41.

*? காஷ்மீரில் அறுபதுக்கு மேற்பட்ட இந்து கோயில்கள் முஸ்லிம்களால் இடிக்கப்பட்டன. லட்சக்கணக்கான இந்துக்கள் வெளியே அடித்து விரட்டப்பட்டனர். இதைக் கேட்க இந்துக்களுக்கு நாதியில்லை. பப்ரி மஸ்ஜித் இடிக்கப்பட்டதைப் பெரிதுபடுத்துகிறீர்களே?*

! காஷ்மீரில் நடந்தது, நடப்பது எல்லாம் சரி என்று யாரும் கூறவில்லை. அங்கு பயங்கரவாதிகள் பல தவறுகள் செய்கிறார்கள். அதற்காக நாமும் பயங்கரவாதிகளாக மாறி விடக் கூடாது. எந்தத் தவறுமே இன்னொரு தவறை நியாயப்படுத்த முடியாது - பப்ரி மஸ்ஜித் இடிக்கப்பட்டதையொட்டி பாகிஸ்தானில் நூற்றுக்கணக்கான கோயில்கள் தரைமட்டமானது உள்பட.

● ஜே. லக்ஷ்மிகாந்தன், மரக்காணம்.

*? சினிமாவில் நடித்தவர்கள் முதல்வராகலாம், ஒரு ஐ.ஏ.எஸ். அதிகாரி முதல்வராகக் கூடாதா? உங்கள் பதில் வருத்தமளிக்கிறதே?*

! நான் சந்திரலேகா முதல்வராகக் கூடாது என்று கூறவில்லை. மக்கள் அவரை ஆதரித்தால் யார் தடுக்க முடியும்? ஆனால் அந்த வாய்ப்பு இன்றைய சூழலில் இல்லை என்பதையே உணர்த்தினேன்.

● கௌ. ராஜேந்திரன், கும்பகோணம்.

*? ஷேர் மார்க்கெட் ஊழலில் அரசியல் பெரும் புள்ளிகள் பலர் சிக்கியிருப்பதால் அதை மூடிமறைக்கத்தானே அயோத்தி பூகம்பம் வெடித்தது?*

! போக்கடா! உங்களுக்குக் கருணாநிதியை விடக் கற்பனை அதிகம்!

● கவீட் ரவி, கும்பகோணம்.

*? சந்திரலேகா முதல்வராக வாய்ப்புண்டா என்ற அபத்தமான கேள்விக்கெல்லாம் நீங்கள் பதில் சொல்ல வேண்டுமா?*

! உங்களுடைய இந்தக் கேள்விக்கு நிச்சயம் பதில் தேவையில்லைதான்.

● ராமசுப்பிரமணியன், தூத்துக்குடி. ❑

*? இந்த வருஷம் இசை விழாவின் உச்ச நட்சத்திரம் யார்?*

! உச்ச நட்சத்திரம் என்று பார்த்தால் தமிழிசை தொடக்க விழாவில் பாடிய எம். எஸ். அவர்கள்தாம். அவர் கச்சேரியைக் கேட்பது ஒரு தெய்வீக அனுபவம். விமர்சனம் - வர்ணனைக்கு அப்பாற்பட்டது. பெரு முயற்சி செய்து அந்த ஒலி - ஒலி வட்டத்திலிருந்து வெளியே வந்து, பிரபலமான ஸீனியர்களையும் ஒதுக்கி விட்டு இளம் கலைஞர்களை நோக்கினால் கல்கி அட்டைப் படத்தை அலங்கரித்த சுதா ரகுநாதன் அயல்நாடுகளுக்குச் சென்று திரும்பி இந்த சீஸனில் சக்கைப் போடு போடுகிறார். பம்பாயிலிருந்து வந்து கொடிகட்டிப் பறக்கிறார் ஜெயஸ்ரீ. அப்படியே கே. வி. நாராயணசாமி மகள் அனுராதா. மெச்சூரிடி வர வர இருவரும் நன்கு பிரகாசிப்பார்கள். ஓ. எஸ். தியாகராஜனின் சர்வ லகு ஸ்வரம் பாடும் பாணி செம்மங்குடி டைப்பில் அமைந்து, ''ஓ.எஸ்.'' போட வைக்கிறது. கார்வைகளில் பிசிறில்லை. பாவமும் இனிமை. அப்புறம் விஜய சிவா, ராஜ்குமார் பாரதி ஆகியோரும் பாராட்டுப் பெறுகிறார்கள். எல்லாருமாகச் சேர்ந்து கர்நாடக இசையை உச்ச நட்சத்திரமாக்கிக் கொண்டிருக்கிறார்கள்!



* கொடி கட்டி...



* ...பறக்கிறார்கள்!

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
எஸ். ராமசுப்பிரமணியன்,
26/6D போல்நாயக்கன் பேட்டை,
தூத்துக்குடி - 628 002.



'ஐஸக் அஸிமோவ்' என்ற எழுத்தாளர் தமது சிறுகதைகளில் தொழிற்சாலைகளில் ரோபோக்களைப் பயன்படுத்துவது பற்றிக் குறிப்பிட்டார். அவர் கருத்துப்படி, 'ரோபோ எந்திர மனிதன். மனிதனுக்கு உதவ முடியுமே தவிர, அதுவே எஜமான் ஆகி விட முடியாது.'

மேலும் அஸிமோவ் 'ரோபோ' சம்பந்தமான கீழ்க்கண்ட நியதிகளைத் தம் கதைகளில் வலியுறுத்தியிருந்தார்.

'ரோபோ' மனிதனுக்குத் தீங்கு செய்யக் கூடாது.

அது மனிதனின் உத்தரவுக்குக் கீழ்ப்படிய வேண்டும். ஆனால், மனிதத் தன்மைக்குத் தீங்கு தரும் உத்தரவுகளுக்கு ஒரு போதும் கீழ்ப்படியக் கூடாது.

'ரோபோ' தனது பாதுகாப்பைத் தானே கவனித்துக் கொள்ள வேண்டும்.

அதே நேரத்தில், தன்னைப் பாதுகாத்துக் கொள்ளும் முயற்சியில் மனிதத் தன்மைக்கு எந்தத் தீங்கும் செய்து விடக் கூடாது.

# இனிய இயந்திரா பற்றி சிறிய செய்திகள்!

'ரோபோ' எனப்படும் எந்திர மனிதன் முதன் முதலில் அறிமுகமானது ஒரு கதாபாத்திரமாகத்தான். செக்கோஸ்லோவாகியாவில் ஒரு நாடக ஆசிரியர். 'கார்ல் சேபக்' என்று பெயர். 'ஆர் யூ ஆர்' என்று ஒரு நாடகம் எழுதினார். 'ரோபோ' அதில் ஒரு பாத்திரம். கதைப்படி அது ஒரு தொழிலாளி. அதாவது 'ரோபோ!' செக் மொழியில் 'ராபோடா' என்றால் தொழிலாளி. கதையின் கரு இதுதான். பேராசை பிடித்த ஒரு மில் முதலாளி, தன் மில்லில் மனிதர்களுக்குப் பதில் எந்திர மனிதனைப் பயன்படுத்த விரும்புகிறான். அந்த எந்திர மனிதன்தான் 'ரோபோ' - அதாவது தொழிலாளி!

பண்டைய கிரீட் தீவின் 'மினாஸ்' என்ற மன்னன் செம்பினால் ஒரு 'ரோபோ' செய்து அதைத் தீவின் காவல் பணியில் ஈடுபடுத்தினான்.

ஹோமரின் 'இலியட்' காவியத்தில் தங்கத்தால் ஆன இரண்டு 'ரோபோ'க்கள் பற்றிய செய்தி உண்டு. அவை அக்னி தேவனின் தூதர்களாகப் பணியாற்றின.

'அம்ப்ரோஸ்' என்ற அமெரிக்க எழுத்தாளர் 'மோவோன்ஸ் மாஸ்டர்' என்ற நூலில் 'செஸ்' விளையாடும் ஒரு 'ரோபோ'வை அறிமுகப்படுத்தியுள்ளார்.

'லியனார்டோ டா வின்சி' என்ற பிரபலமான மறுமலர்ச்சி ஓவியர் எந்திரச் சிங்கம் ஒன்றைச் செய்திருந்தார். 12ஆம் லூயி மன்னன் மிலான் நகருக்கு வருகை புரிந்த போது, அதுதான் அவனை வரவேற்றது.

18ஆம் நூற்றாண்டில் பிரான்சில் செய்யப்பட்ட 'வாகென்சன் டக்' எனப்பட்ட எந்திர வாத்து உண்டு, குடித்து, பேசி இங்குமங்கும் நடந்தது.

அதே நூற்றாண்டில், நம் நாட்டில் மைசூர் மன்னன் திப்புவிடம் மரத்தினால் ஆன சிங்கம் ஒன்று இருந்தது. அது எந்திர சக்தியால் கர்ஜித்தது.

1934 சிகாகோ உலகச் சந்தையில் 'ரோனால்டு ஸ்கேஃபர்' என்பவரால் ஒரு ரோபோ செய்து வைக்கப்பட்டிருந்தது. அது சுவரில் ஆணி அடித்தது. ஜன்னலையும் கூடச் சுத்தம் செய்தது.

ஜப்பானில் நடந்த ஒசாகா 70ல் 24 அடி உயர 'ரோபோ' ஒன்று காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தது.

– ஜய்ராம்ஜி



# பாலம்

●● பக்தி இசையை முடிந்த அளவு தமிழக மெங்கும் இலவசமாக நடத்தி வருகிறேன். மக்களுக்கு அமைதி தரும் பக்தி இசையை எல்லாக் கோயில்களிலும் பாட ஆவல். சுய முகவரியிட்ட அஞ்சல் உறையுடன் தொடர்பு கொள்ள முகவரி :

– குச்சனூரர் எஸ். எம். சின்னதுரை,
307, பாரதியார் நகர்
1 வது தெரு,
பிச்சைபிள்ளை சாவடி,
மதுரை – 625 016.

●● என் சகோதரி 3.12.92 காலை 3:15 மணிக்கு வேலூர் பஸ் ஸ்டாண்டில் அரிஸ்டோ கிராட் ஸூட்கேஸ் தொலைத்து விட்டாள். SM என்று இனிஷியல் பொருத்தப்பட்டது. தகவல் அறிந்தவர்கள் தொடர்பு கொள்ள வேண்டுகிறேன்.

– எஸ். கணேசன்,
74, காமாட்சி அம்மன் சன்னதி தெரு,
காஞ்சிபுரம் – 631 502.

●● வட ஆர்காடு அம்பேத்கார் மாவட்டத்திலும் திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்டத்திலும் உலவுகிற நாட்டுப் பாடல்களைத் தொகுத்து வெளியிட முனைந்துள்ளோம். அன்பர்கள் தங்களிடம் உள்ள நாட்டுப் பாடல்களை அனுப்பி வைக்கும்படி வேண்டுகிறோம்.

– தங்கத் தமிழ் மன்றம்,
3, முதலாம் பிரதான சாலை,
கிழக்கு அண்ணாநகர்,
வேலூர் – 632 001 வ. ஆ. அ. (மாவ)

●● MATHURIN DONDO எழுதிய MODERN FRENCH COURSE புத்தகமும் CLAIRE A ROE எழுதிய LES BELLES HISTOIRE புத்தகமும் தேவை. உரிய விலை கொடுத்தும் பெற்றுக் கொள்ளத் தயார்.

– எஸ். ஹரிஹரன்,
மே/பா திரு ராஜா,
காந்திஜி ரோடு,
பரமக்குடி – 623 707.

●● பால் பாயிண்ட் பேனா ரீஃபில்களில் கூர்முனை (nozzle) தயாரிப்பவர்கள் அல்லது அது சம்பந்தப்பட்ட விவரம் தெரிந்தவர்கள் தயவு செய்து உடன் தொடர்பு கொள்ளவும். நன்றி.

– எஸ். டி. மூர்த்தி,
26, முக்தி விநாயகர் கோவில் தெரு,
மடப்புரம்,
திருவாரூர் – 610 002.

●● நாங்கள் மரபு வழி வரும் ஆடோஸ்கிளிரோஸிஸ் என்ற ஒரு வகையான காது சம்பந்தப்பட்ட நோயைப் பற்றி ஆராய்ந்து வருகிறோம். (Otosclerosis) எனவே இந்நோயால் பாதிக்கப்பட்டு சிகிச்சை பெற்றவர்கள் எங்களைக் கீழ்க்கண்ட முகவரியில் தொடர்பு கொண்டு ஆராய்ச்சிக்கு உதவ வேண்டுகிறோம்.

– தே. ஆ. சிவகுமார், ஆர். சபீதா,
டிபார்ட்மெண்ட் ஆஃப் ஜெனடிக்ஸ்,
பி.ஜி.ஐ. பி.எம்.எஸ்.,
தரமணி, சென்னை – 600 113.

●● தொழிற்பயிற்சி நிலையத்தில் ஒயர்மேன் பிரிவில் படித்து வரும் எனக்கு ANWANI எழுதிய Basic Electrical Engineering புத்தகம் தேவைப்படுகிறது. பழைய புத்தகம் யாரிடமாவது இருந்தால் விலை குறிப்பிட்டு எழுதவும். தபால் செலவும் ஏற்கிறேன்.

– வி. ஜவஹர்,
த/பெ பி. வண்ணமுத்து,
6/21, ஹரிஜன் தெரு,
மேச்சிவந்திபுரம், அம்பை வட்டம்,
நெல்லை கட்டபொம்மன் (மாவ)

●● கடந்த ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாகச் சேகரித்து வந்துள்ள தெய்வீக நூல்களை அவற்றைத் தொடர்ந்து பயன் படுத்தக் கூடியவர்களுக்கு விற்க விரும்புகிறேன். வால்மீகி ராமாயணம், பாகவதம், விஷ்ணுபுராணம், கம்பராமாயணம் என்றெல்லாம் முப்பது தலைப்புகளில் நூல்கள் உள்ளன. வசதி உள்ளவர்கள் இவற்றை வாங்கி முதியோர் இல்லங்களுக்கு அன்பளிப்பாகக் கொடுப்பது உத்தமம்.

– P. B. கோபாலன்,
5, ராஜன் தெரு, தி. நகர்.,
சென்னை – 17.

(பாலம் மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி காரியாலயம் பொறுப்பு ஏற்க இயலாது. – ஆர்.)

**பெங்களூர் ரிப்போர்ட் :**

# பெங்களூரிலும் பயங்கரக் கலவரம்!



* மூன்று மதத்தைச் சேர்ந்தவர்களும்....

பொதுவாகவே இந்து முஸ்லிம் பிரச்னை என்றால் பெங்களூரில் என்றைக்குமே அவ்வளவாக வெடிக்காது. காரணம், பெங்களூரில் முஸ்லிம்கள் அதிகமாக வசிக்கும் பகுதிகள் எல்லாமே பெரும்பாலும் தமிழர்களும் அதிகமாய் வசிக்கும் பகுதிகள். முஸ்லிம்களுக்கும் தமிழர்களுக்கும் எப்போதுமே நல்ல 'அண்டர்ஸ்டாண்டிங்' உண்டு என்பதால் பிரச்னைகள் கிளம்புவதில்லை. இந்த முறையும் அப்படித்தான் இருக்கும் என்று எதிர்பார்த்திருந்த நம்பிக்கையில் மண் விழுந்துவிட்டது. பெங்களூரிலும் பயங்கரக் கலவரம். துப்பாக்கிச் சூட்டிலும் கத்திக் குத்துகளிலும் இருபத்தைந்து பேருக்கு மேல் செத்தார்கள்.

அரசாங்கத்தின் தீவிரமான நடவடிக்கைகள் காரணமாக பதற்றம் வெகுவாகக் குறைந்தது என்றுதான் சொல்ல வேண்டும். 'ஒரு இந்து, ஒரு முஸ்லிம், ஒரு கிறிஸ்துவர்' என்று மூன்றுபேர் அமைந்த கூட்டணி, பாதிக்கப்பட்ட இடங்களைச் சுற்றிப் பார்த்து, குறைகளைக் கேட்டு, பாதிக்கப் பட்டவர்களுக்கு ஆறுதல் சொல்லி நடவடிக்கை எடுத்தது. ஆமாம். எல்லா இடங்களுக்கும் முதல்வர் வீரப்ப மொய்லி, ஜாபர் ஷெரீஃப், மார்கரெட் ஆல்வா மூவரும் சேர்ந்தே போனார்கள். இறந்தவர் குடும்பங்களுக்கான நஷ்டத் தொகையை ஒரு லட்சம் ரூபாயாக உயர்த்தினார் மொய்லி.

பெங்களூருக்கு அருகேயுள்ள 'பிடதி' என்ற ஊரைத் தேர்ந்தெடுத்து, ஜப்பானிய மாடல் நகரம் ஒன்று அமைக்கத் திட்டமிடப்பட்டு முதற்கட்ட நடவடிக்கைகளை மேற் கொள்வதற்காக ஜப்பானியக் குழு ஒன்று வந்தது. இக் குழுவை ஊருக்குள்ளேயே விடமாட்டோம். எங்கள் ஊரில் எந்த நகரத்தையும் அமைக்க விடமாட்டோம் - என்று கிளர்ச்சியில் இறங்கிவிட்டது விவசாயிகள் சங்கம். விவசாய நிலங்கள் போய்விடும், தூய்மையும் சுகாதாரமும் கெட்டுவிடும், கலாசாரம் கெட்டுவிடும் என்பது இவர்களின் கோஷம். இப்படியே ஒவ்வொரு விஷயத்துக்கும் ஏதாவது காரணம் சொல்லித் தடை ஏற்படுத்திக் கொண்டிருந்தால் நவீன நாடுகளுடன் எப்போதுதான் கைகோத்துக் கொள்ள முடியுமோ தெரியவில்லை.

குனிகல் தொகுதியில் இந்து முஸ்லிம் கலவரத்தையொட்டி கடையடைப்பு தினத்தன்று அரசாங்க பஸ்கள் எதுவும் ஓடவில்லை. பஸ் டெப்போவுக்குள் புகுந்து பஸ்களை ஓட்டச் சொல்லி வற்புறுத்தியிருக்கிறார் சமாஜ்வாடி ஜனதாக் கட்சியைச் சேர்ந்த எம்.எல்.ஏ.வான ஒய்.கே. ராமையா. நிர்வாகம் மறுத்திருக்கிறது. வாக்குவாதம் அதிகமாகிப் பணியாளர்களில் ஒருவரை வலுக்கட்டாயமாய் இழுத்து வந்து, பஸ்ஸில் ஏற்றி பஸ்ஸை ஓட்டச் சொல்லியிருக்கிறார். பணியாளர் மயங்கி விழ ஆஸ்பத்திரிக்குக் கொண்டு சென்றிருக்கிறார்கள். ஆஸ்பத்திரியில் அந்த நபர் பரிதாபமாய் மரணமடைந்து விட.... இப்போது ராமையா சிக்கலில். ''ஏற்கெனவே அந்தப் பணியாளர் குடித்திருந்தார்; அளவுக்கு மீறி குடித்ததனால் மாரடைப்பு வந்து செத்துப் போய்விட்டார்'' என்று எம்.எல்.ஏ. தரப்பில் காரணம் சொல்லப்பட.... இல்லையில்லை, ''எம்.எல்.ஏ. அடித்ததனால்தான் மாரடைப்பு வந்து செத்தார்'' என்று மற்றவர்கள் சொல்ல, குனிகல் பதற்றத்தில் இருக்கிறது.

மொய்லியின் மந்திரிசபை பதவி ஏற்றது முதல், அரசாங்க நிர்வாகம் தூசி துடைக்கப்பட்டு, பழுது பார்க்கப்பட்டு கறுகறுப்பாக இயங்குகிறது. ''கர்நாடகத் தலைமைச் செயலகம் ராமகிருஷ்ண ஹெக்டே காலத்தில் எப்படி இயங்கிற்றோ அப்படி இயங்குகிறது'' - என்று பாராட்டுகிறது உள்ளூர் ஆங்கிலப் பத்திரிகை. மந்திரிகளுக்கு ஏகப்பட்ட கட்டுப்பாடுகள்... தினசரி அலுவலகம் வரவேண்டும்... வெளியூர் செல்பவர்கள் சொந்தச் செலவில்தான் தங்க வேண்டும்... உடன் யாரையும் அரசாங்கச் செலவில் கூட்டிச் செல்லக் கூடாது... இப்படி. மந்திரிகளில் ஒருவரான ஹாரனஹள்ளி ராமசாமி இன்னும் ஒருபடி மேலே போய்விட்டார்: ''விழாக்களில் எங்களுக்கு மாலை போடாதீர்கள். அவ்வளவும் வேஸ்ட். வேண்டுமானால் எலுமிச்சம் பழம் கொடுங்கள், ஊறுகாய் போடவாவது உதவும்.''

– பெர்னாண்டஸ்.

# ராம் - ரஹீம் மந்திர் கட்டுங்கள்!

◆ "அத்வானிக்கு ஓர் அழைப்பு" என்ற தங்கள் தலையங்கம் படித்தேன். புடம் போட்ட தங்கம் போல் விளங்கியது. அதில், கடைசியில் குறிப்பிடப்பட்டுள்ள சில வரிகள் வைர ரூபமாக ஒளிர்கின்றன. உண்மையில், உயர்வான, பண்பு நிறைந்த இந்திய மக்களின் ஏகோபித்த எண்ணங்களின் பிரதிபலிப்பே தங்கள் தலையங்கமாகும்.

திருக்காட்டுப்பள்ளி,
ஜி. பாலகிருஷ்ணன்.

◆ மசூதியைத் திரும்பக் கட்ட ஒத்துழைப்புத் தருமாறு அத்வானிக்குக் கூறியுள்ளீர்கள். சரி. அத்வானியால் எண்ணெய் வார்க்கப்பட்ட தீயை அவரே அணைப்பது சாலப் பொருத்தமே. ஆனால் அயோத்தி பிரச்னை அரசியல் விவகாரம் மட்டுமல்ல; உணர்வு அடிப்படையிலான விஷயம் அது. அவசரப்பட்டு மசூதி திரும்பக்கட்டப்பட்டால் பின்னொரு நாளில் வேறொரு மதவெறிக் கும்பல் அதை இடித்துத் தள்ளாது என்பது என்ன நிச்சயம்?

மசூதியும் வேண்டாம். ராமர் கோவிலும் வேண்டாம். அந்த இடத்தில் இந்து - முஸ்லிம் கலாசார இணைப்பில் ஒரு சேவை மையம் உருவாக்கப்பட்டு பொது நன்மைக்காக அவ்வமைப்பை செயல்படச் செய்ய வேண்டும். ராம் - ரஹீம் மந்திர் என அவ்வமைப்புக்குப் பெயரிடலாம்.

குஞ்சரம், பா. சிவகுமார்.

◆ உ.பி.யில், பி.ஜே.பி. அரசை ஒதுக்கி விட்டு, ராணுவத்தைக் கொண்டு சுற்றி வளைத்துக் கர சேவகர்களை பாபர் மசூதியை நெருங்க விடாமல் தடுத்திருந்தால், உலகளவில் இந்தியாவின் கௌரவம் காப்பாற்றப்பட்டிருக்கும். வெளிநாடுகளில் இந்து கோயில்கள் தாக்கப்பட்டு இருக்காது. இந்தியாவின் மதச் சார்பற்ற கொள்கை போற்றப்பட்டிருக்கும். தமது பதவியைக் காப்பாற்றவும், காங்கிரஸ் அரசைக் காப்பாற்றவுமே




பிரதமர் பொறுமையாக முயன்றிருக்கிறார் என்பது சாதாரண பாமரனுக்குக் கூட புரிந்த உண்மை.

திருநெல்வேலி,
எஸ். நல்லமுத்து.

◆ இவ்வார கல்கி அட்டை சாதாரணமானதல்ல; பூஜை அறையில் வைத்து, தினசரி வணங்க வேண்டிய அரிய பொக்கிஷம்.

கும்பகோணம்,
புலவர் எஸ்.கே. மூர்த்தி.

◆ கலைவிழா சிறப்பிதழில் தமிழிசையின் சிறப்பை விளக்கும் மீ.ப. சோமுவின் கட்டுரையை அச்சிட்டு இலவசமாக கர்நாடக இசைக் கலைஞர்கள் அத்தனைபேருக்கும் அளிக்க வேண்டும். கச்சேரியின் இறுதியில் ஓரிரு தமிழ்ப்பாட்டுகள் பாடினேன் என மார் தட்டிக் கொள்ளும் கலைஞர்கள், இக்கட்டுரையைப் படித்த பிறகேனும் 'ஓரிரு தெலுங்குக் கீர்த்தனைகள் பாடினேன்' என்று கூறும் நிலைக்கு மாறட்டும்.

திருவாரூர், அ. சம்பத்.

◆ தமிழிசைச் சங்கம் பொன் விழா இதழில் மீ.ப. சோமு அவர்கள் தந்த விவரம் பாதுகாப்புக்குரியது. சிதம்பரம் தந்த விவரம் வியப்புக்குரியது.

மதுரை - 9,
இரா. கல்யாண சுந்தரம்.

◆ சப்தமில்லாமல் ஒரு சங்கீதச் சிறப்பிதழை அளித்து ஜமாய்த்துவிட்டீர்களே. சிறுகதையிலிருந்து பேட்டிகள், சிறப்புச் சிரிப்புகள் வரை எல்லாவற்றிலும் சங்கீத மணம்.

தக்கோலம், அ. முஸ்தபா.

◆ "இவர்களெல்லாம் சபா செகரட்டரி ஆனால் எப்படி இருக்கும்" என்ற கற்பனை அருமையாக இருந்தது. அந்த கற்பனையே நிஜமானால் எப்படி இருக்கும் என்று எண்ணிப் பார்த்த போது சிரிப்பை அடக்கவே முடியவில்லை.

திருச்சி - 8, தி.மா. தமிழ்முருகன்.

◆ சில சினிமாக்களில் இரண்டு மூன்று சீன்களில் வந்து செல்லும் மீசை முருகேசிடம் இவ்வளவு திறமைகளா? ஆச்சர்யப்பட வைக்கிறார் மனிதர்!

ஓசூர், ஆர். முரளி.

◆ டி.வி. பார்க்கும் ஒவ்வொருவரின் எண்ணத்தையும் பிரதிபலிக்கும் விதத்தில் தங்கள் டி.வி. விமர்சனம் உள்ளது. என்ன சூடு தந்தாலும் நம்ம ஆளுங்க மாற மாட்டாங்க!

அலங்கியம், அண்ணாச்சி.

◆ கே. செல்வனின் 'மறதிக்கு மருந்து' சிறுகதை, மறதிக்கு மட்டும் மருந்தல்ல; அலட்சியத்துக்கும் உதாசீனத்துக்கும், எரிச்சலுக்கும் போடப்பட்டுள்ள ஊசி.

தஞ்சாவூர் - 1,
இரா. ஆதிநாராயணன்.

◆ "பாடல் பெறாத தலங்கள்" சிறுகதையில் 'வெளி அழகுக்கு மயங்குகிற காலம் இது' என்ற ஓர் உயிரோட்டமான உண்மையை உணர்த்தியது பாராட்டத் தக்கது.

பூதலூர், டி. ஜெயசீலன்.



* சுப்ரமணியம் சுவாமி வேடம் அணிந்து அ.இ.அ.தி.மு.க. மகளிர் அணியினர் கலாட்டா...

# இது 'ஜெ.'நாயகம்!

சுவாமியின் 'தாட்பூட்' அரசியலை நம்மால் ஏற்க முடியவில்லைதான். அவரது செயல்பாடுகளில் நமக்குக் கருத்து வேறுபாடுகள் உண்டு.

இது ஒருபுறமிருந்தாலும் ஜனநாயக நாட்டில் சுவாமி போன்ற அரசியல்வாதிகள் இருக்கத்தான் செய்வார்கள். தேர்தல் பாலிடிக்ஸில் அவர்களை ஓரம் கட்ட வேண்டுமே தவிர, வன்முறை மூலம் குரல் வளையை நெரிக்கக் கூடாது.

ராசாராம், பி.ஹெச். பாண்டியன் வீடுகள் தாக்கப்பட்டன. ராசாராம் வீட்டில் வேலைக்காரனும், வேலைக்காரியும்தாம் கலாட்டா செய்தனர் என்று கூறி அவர்களை அழைத்துப் போய் மிரட்டியிருக்கிறது காவல்துறை. சுவாமி மதுரை சென்ற போது ரயில்வே ஸ்டேஷனில் நடந்த கலாட்டாவின் போது பாதுகாப்பு கொடுத்து அவரைப் பத்திரமாக அழைத்துச் சென்ற போலீஸ் அதிகாரி காசிவிஸ்வநாதனுக்கு மாற்றல் உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. சென்னையில், ஜனதா அலுவலகத்தில் புகுந்து செயலாளர் ராஜ்குமார் மீது அரிவாள் வெட்டு. இதற்காக யாரும் இதுவரை கைது செய்யப்படவில்லை. தொடர்ந்து வேலூரில் ஜனதா கட்சி ஆபீஸ் மீது வெடிகுண்டு தாக்குதல். போதாக்குறைக்கு நீதிமன்றத்திலேயே கலாட்டா. வழக்கறிஞர்களே சுவாமியை வாய்க்கு வந்தபடி நீதிபதி எதிரிலேயே திட்டியிருக்கின்றனர். சுவாமியும் நண்பர்களும், உயிருக்குப் பயந்து நீதிபதியிடம் தஞ்சம் புகுந்தார்கள். அவரது ஏற்பாட்டின் பேரில் ஒரு உதவிக் கமிஷனர் சுவாமியைப் பத்திரமாக அழைத்துப் போனார். அந்த உதவி கமிஷனருக்கும் மாற்றல் போட்டு விட்டார்கள்! வெளியே நடந்த ஆபாச கலாட்டாவில் இயக்கப் பிரமுகர் செங்கம் ஜபாருக்கு அடி.

இந்தத் தாக்குதல்களை எல்லாம் எதிர்த்து, உண்ணாவிரதம் இருக்கலாம் என்றால் அங்கும் தகராறு செய்ய, ''உண்ணும் விரதம் நடத்துகிறோம்'' என்று வந்து விட்டனர் அ.தி.மு.க.வினர்.

''அன்று அ.தி.மு.க.வினர் செய்த அநியாயம் கொஞ்ச நஞ்சமல்ல. நாங்கள் சுதந்திரமாகச் செயல்பட அனுமதிக்கப்பட்டிருந்தால் அவர்களை 'பெண்டு' நிமிர்த்தியிருப்போம்'' என்றார் அன்று பந்தோபஸ்தில் இருந்த போலீஸ்காரர் ஒருவர்.

நடந்த சம்பவங்களைப் பற்றி போலீஸ் என்ன சொல்கிறது என்று தெரிந்து கொள்ள கமிஷனர் ராஜகோபாலனைத் தொடர்பு கொண்டோம். 'என்னைக் கேட்பதை விட சம்பந்தப்பட்ட ஏரியாவைச் சேர்ந்த துணை, உதவிக் கமிஷனர் களைக் கேளுங்கள்'' என்று ஒதுங்கினார் அவர். வட சென்னை துணைக் கமிஷனர் ராமநாதன், ''அன்று போலீஸ், இரண்டு பிரிவினரையும் விலக்கி வைத்து கலாட்டா ஏற்படாமல் பார்த்துக் கொண்டது. பின்னர் தலைவர்கள் பத்திரமாக அனுப்பி வைக்கப் பட்டார்கள். அன்று இரவு எட்டு மணி அளவில், தான் தாக்கப்பட்டதாக செங்கம் ஜபார் புகார் கொடுத்திருக்கிறார். எங்கள் எதிரில் கலாட்டா எதுவும் நடக்கவில்லை. அதனால் ஜபாரின் புகார் மீது விசாரணை செய்கிறோம்'' என்றார். ''ராஜ்குமாரின் மீது அரிவாள் தாக்குதல் தொடர்பாகவும், உண்ணாவிரத கலாட்டாவைத் தொடர்ந்தும் யாராவது கைது செய்யப்பட்டிருக்கிறார்களா?'' என்று திருவல்லிக்கேணி உதவிக் கமிஷனர் சுப்பராயனிடம் கேட்ட போது, ''யாருமே புகார் கொடுக்கவில்லையே. நாங்கள் எப்படி நடவடிக்கை எடுக்க முடியும்?'' என்றார்.

'எனக்கும் சுவாமிக்கும் தொடர்பு இல்லை' என்று பிரதமர் எப்போதோ சொல்லி விட்டார் என்றாலும் 'அவரைக் கட்டுப்படுத்தி வையுங்கள். இல்லையேல் என் தொண்டர்களை நான் கட்டுப்படுத்த முடியாது' என்று பிரதமருக்கு மிரட்டல் கடிதம் எழுதுகிறார் ஜெ. சுவாமிக்குப் பாதுகாப்புக் கொடுக்கும் போலீஸ் அதிகாரிகளுக்கு மாற்றல் உத்தரவும் போடுகிறார். ''இதெல்லாம் போலீஸார் எப்படி நடந்து கொள்ளணும் என்பதற்கு ஒரு சூசகமான அறிவிப்புதானே?'' என்று கேட்கிறார் ஜனதா ஆதரவாளர் ஒருவர். ''நடப்பது ஜனநாயகம் அல்ல. ஜெ. நாயகம்'' என்கிறார் அவர்.

– ப்ரியன்

# ஐம்பது ஆண்டுகளுக்கு முன்...

கல்கி ஜனவரி 1, 1943

## புது வருஷத் தீர்மானங்கள்
















கார்ட்டூன் : உம்மன்

# திறப்பு விழா

இந்த வருஷம் மியூஸிக் அகாடமி விழா வைத் திறந்து வைத்த ஸர் எம். வெங்கட சுப்பராவைப் போல் அவ்வளவு அழகாக யாருமே தங்கள் பிரசங்கத்தை ஆரம்பித்த தில்லை. முதல் வாக்கியத்திலேயே இவர் தம்மை 'இக்னாரமஸ்' என்று தெரிவித்துக் கொண்டார். 'இக்னாரமஸ்' என்னும் அழகிய கம்பீரமான வார்த்தைக்குத் தமிழில் சரியான பிரதிபதம் கிடைப்பது கஷ்டமாயிருக்கிறது. ஆங்கிலமும் தமிழும் நன்கறிந்த சில நண்பர் களைக் கேட்டுப் பார்த்தேன். அவர்கள், ''அஞ்ஞான இருள் குன்று'' ''மௌடீக மலை'' ''மட சாம்பிராணி'' முதலிய சொற் றொடர்களைக் கூறினார்களே தவிர, 'இக்னா ரமஸ்' என்பதைப் போல் கம்பீரமான தனிப் பதம் ஒன்றைக் குறிப்பிட முடியவில்லை. இது ஒருபுறமிருக்க,

ஸர் வெங்கட சுப்பராவ் தம்மைச் சங்கீத விஷயங்களில் 'இக்னாரமஸ்' என்று கூறிக் கொண்டது எவ்வளவு சத்தியமான வார்த்தை என்பதை அவருடைய பேச்சின் கடைசிப் பகுதியில் நிரூபித்து விட்டார். தமக்குக் கொஞ்சமும் தெரியாத விஷயத்தைப் பற்றி வேறு யாரோ சொல்லிக் கொண்டிருந்ததை ஒப்புவித்தார். தமிழ்ப் பாட்டு இயக்கத்தை வெளுத்து வாங்கினார். ''கலையில் அரசிய லைக் கொண்டு வரலாமா?'' என்று கேட்டார். ''இத்தனை நாளும் நீங்கள் தெலுங்குப் பாட்டுக்களையேதான் கேட்டுக் கொண்டு வந்தீர்கள்? இப்போது தமிழ்ப் பாட்டு என்ன வந்தது கேடு?'' என்றார். ''திராவிட பாஷை களுக்குள் தெலுங்குதான் இனிமையானது'' என்னும் பழைய பெயர் போன அபத்தத்தைத் திருப்பிச் சொன்னார். ''தமிழ்ப் பாட்டு வேணு மானால் தேவாரம் - திருவாசகம் இருக்கிறதே? வேறு என்னத்துக்கு?'' என்று கேட்டார். இன்னும், ''இம்மாதிரி பயங்கர மர்ம இயக்கங்களினால் ஜெர்மனி எத்தகைய கேட்டை அடைந்தது தெரியுமா?'' என்று மயிர் கூச்செறியக் கேட்டுத் தமிழிசைக்காரர் களெல்லாம் ஒருவேளை ஹிட்லர் கோஷ்டி யைச் சேர்ந்தவர்களோ என்ற சந்தேகத்தை உண்டாக்கினார்! ''தமிழிசையாகிய பேரபா யத்தை அடியோடு வேரறுக்காத வரையில் நிம்மதியாகத் தூங்க முடியாது!'' என்றார்.

மூன்று நிமிஷத்துக்குள் இவ்வளவு அபத் தங்களையும் இல்லாத காரியங்களையும் அசட்டு வாதங்களையும் சொல்லக் கூடியவ ருக்கு 'இக்னாரமஸ்' என்ற பட்டம் தகுதி இல்லையென்றால், வேறு யாருக்குத்தான் தகுதியாயிருக்க முடியும்?

ஆனால், அகாடமியின் துரதிர்ஷ்டமும், தமிழ்நாட்டின் நல்லதிர்ஷ்டமும், சங்கீத தேவதையின் நல்ல காலமும் சேர்ந்து, இந்த வருஷத்து மகாநாட்டுக்கு மழவராய நேந்தல் சுப்பராம பாகவதர் அக்கிராசனராக வரும்படி நேர்ந்தது. ஸர் எம். வெங்கட சுப்பராவின் அபத்தங்களுக்கு வேறு யாரும் பதில் சொல்வதற்கு அவசியமே இல்லாதபடி பாகவதர் தமது அக்கிராசனப் பிரசங்கத்தில் பதில் சொல்லி விட்டார் :

''இன்னும் நம் தமிழ்நாட்டின் தாய் பாஷையாகிய அமிழ்தினுமினிய தமிழ் மொழியில் நம் முன்னோர்களான ஸ்ரீ சமயாசாரியாள், ஸ்ரீ முத்துத் தாண்டவர், ஸ்ரீ அருணாசலக் கவி, திருவிளையாடல் ஸ்ரீ சுப்பிரமணிய பாரதிகள், ஸ்ரீ கவி குஞ்சர பாரதிகள், ஸ்ரீ சிதம்பர பாரதிகள், ஸ்ரீ கோபாலகிருஷ்ண பாரதிகள், ஆகியோர் பக்தி பரவசத்தோடு ஆயிரக் கணக்கான பண்களும், கீர்த்தனங்களும், பதங்களும் தேனொழுகப் பாடியுள்ளார்கள். அவற்றில் தெலுங்கு முதலான பாஷைகளிலுள்ள பெரியவாளின் கீர்த்தனங்களைப் போலவே அந்தந்த ஸந்தர்ப்பங்களுக்கு உகந்தவாறு ராகம், பாவம், தாளம் ஆகிய சிறந்த அம்சங்கள் விசேஷமாய்ப் பொருந்தியிருப்பதைக் காணலாம். ஆகையால் தமிழ்ப் பெரியாரின் கீர்த்தனங்களையும் ஸங்கீத வித்வான்கள் கையாள வேண்டும் என்பது என் அபிப்பிராயம்.''



✱ மழவராயநேந்தல் சுப்பராம பாகவதர்

பெரிய பரம்பரையில் வந்தவர் மகா வித்வான் ஸ்ரீ சுப்பராம பாகவதர். ''இந்த நாளில் உள்ள வித்வான்களுக்குள்ளே சங்கீதக் கலையின் சகல அம்சங்களையும் பூரணமாய் அறிந்தவர் இவர் ஒருவர்தான்'' என்று ஸ்ரீ பொன்னையாப் பிள்ளை இவரை மகாநாட்டுத் தலைமைக்குப் பிரேரேபிக்கும் போது கூறினார்.

- ஆடல் பாடல் - கர்நாடகம்



★ கே.ஆர். கௌரி

# கோஷ்டிப் பூசலில் கம்யூனிஸ்ட் கட்சி!

●● கேரள இடது கம்யூனிஸ்ட் கட்சியில் நம்பூதிரிபாடு கோஷ்டி ஒன்றும் அவரை எதிர்க்கும் கோஷ்டி ஒன்றும் செயல்பட்டு வருவது எல்லோருக்குமே தெரிந்த "ரகசியம்". இதில் நம்பூதிரிபாடுக்குக் கொஞ்சம் ஆதரவாளர்கள் அதிகம். முன்னாள் முதல்வர் நாயனார் நம்பூதிரி பாடு கோஷ்டியைச் சேர்ந்தவர்.

இதற்கு மறுபுறமாக, கே.ஆர். கௌரி அம்மாளுக்கும் கட்சியில் ஆதரவாளர்கள் உண்டு.

சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் கே.ஆர். கௌரியை மட்டம் தட்ட நம்பூதிரி பாடு கோஷ்டி தவறுவதில்லை. இந்த நிலையில் "கேரளாவின் மிகச் சிறந்த எம்.எல்.ஏ" என கே.ஆர். கௌரி அம்மாள் தேர்ந்தெடுக்கப்பட்டார். இதனைப் பாராட்டும் முகமாக அவர் தொகுதியில் ஒரு கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டது. ஒரு ஆர்.எஸ்.எஸ். தலைவரும் கௌரியைப் பாராட்டிப் பேசுவதாக இருந்தது. இது போதாதா எதிர் அணிக்கு? கௌரி அம்மா மீது இதையே குற்றச் சாட்டாகச் சுமத்தி, கட்சியின் முக்கிய பொறுப்புக்களிலிருந்து அவரை நீக்கி வைத்துள்ளார்கள். சேர்தலை, மாக்டவல் தொழிற்சாலையில் போட்டி சி.ஐ.டி.யு. தொழிற் சங்கத்தை உருவாக்கியதாகவும் அவர் மீது குற்றம் சுமத்தப்பட்டுள்ளது.

கௌரி மீது நடவடிக்கை எடுக்கப்பட்டிருப்பது இன்றைய எதிர்க் கட்சித் தலைவர் அச்சுதானந்தனுக்கும் கொஞ்சம் கிலியைக் கொடுத்துள்ளது. காரணம், இவர் கௌரி கோஷ்டியைச் சேர்ந்தவர். அடுத்த குறி அச்சுதானந்தன்தான் என நம்பூதிரிபாடு கோஷ்டியினர் கூறுகிறார்கள்.

இந்த நிலையிலும் தம் மீது எடுக்கப்பட்டுள்ள நடவடிக்கை பற்றி கௌரி அம்மா இப்படி கூறுகிறார்: "கட்சி என்ன கட்டளையிடுகிறதோ அப்படியே நான் நடப்பேன்".

ஆனால் அவரது ஆதரவாளர்களோ, "நாங்கள் நம்பூதிரிபாடு கோஷ்டியைச் சும்மா விடமாட்டோம்" எனக் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார்கள்!

●● கம்யூனிசத்தை நாடகம் மூலம் வளர்த்தவர் என்ற பெருமை அண்மையில் காலமான தோப்பில் பாசிக்கு உண்டு. இவ்வளவிற்கும் பாசி ஆரம்பத்தில் காங்கிரசில்தான் இருந்தார். பிறகு அதன் போக்கு பிடிக்காமல் கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்தார். பல தடவை தலைமறைவு வாழ்க்கை நடத்தியுள்ளார். இவரது படம் நுலாபாரம்தான் நடிகை சாரதாவிற்கு ஊர்வசி பட்டம் தேடிக் கொடுத்தது.



★ தோப்பில் பாசி

அரசியல் கட்சிகள் அடிக்கடி "பந்த்" நடத்துவதைக் கண்டித்து இவர் எழுதிய "கையும் தலையும் புறத்திடருது" என்ற நாடகம் மிகவும் பிரபலமானது. அந்த நாடகக் கதை போலவே இவர் வாழ்க்கையிலும் நடந்து விட்டது. அயோத்தியா பிரச்னை தொடர்பாக பந்த் நடந்த டிசம்பர் 8 ம் தேதி காலையில் 10 மணிக்கு இவருக்கு மாரடைப்பு ஏற்பட்டது. பந்த் காரணமாகப் பல இடங்களில் வழித்தடை இருக்கவே சுற்றி வளைத்துக் கொண்டு ஆஸ்பத்திரிக்குப் போக நேர்ந்தது. ஆஸ்பத்திரியை நெருங்கும் போதே காரில் வைத்து இவரது உயிர் பிரிந்துவிட்டது.

– எஸ்.எஸ். மணி

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் : ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka



மனங்கவர் மென்மையான வண்ணங்கள் முதல்.

கண்கவர் கவர்ச்சியான வண்ணங்கள் வரையில்.

உங்கள் எண்ணத்திற்கேற்ப 500 க்கும் மேற்பட்ட தரமான

பிளவுஸ் துணிகள். உங்கள் அபிமான லக்ஷ்மி மில்லிலிருந்து.

**லக்ஷ்மி பிளவுஸ் துணிகள்**

வருடத்தின் நாட்களைக் காட்டிலும் அதிக வண்ணங்கள்

Seagull LD/1102